KALKI
8.12.85
ரூ 1.50



ராஜீவின் புதிய கல்வித் திட்டம்:

# உங்கள் குழந்தைகளின் எதிர்காலம்?




# கல்கி

## மரம் மற்றும் உலோகப் பரப்புகள் எழில் மயமாகவே இருக்க

# நெரோலாக் ஸிந்தெடிக் எனுமல்

### பெயிண்ட் டெக்னலஜி அறிந்தவர்களின் தயாரிப்பு.

சீதோஷ்ண மாறுதல்களினுலும் காலத்தினுலும் எல்லா வீடுகளும் பழுதடைகின்றன.

அதனுல்தான் கதவுகள், ஜன்னல்கள், அலமாரிகள் மற்றும் ஃபர்னிச்சர்களுக்கு உயர்தர பெயிண்ட்டின் பாதுகாப்பு அவசியப்படுகிறது. நெரோலாக ஸிந்தெடிக் எனுமல். இதனுடைய கண்ணைக் கவரும் விதவிதமான வண்ணச் சாயல்கள் மர, உலோகப் பரப்புகளுக்கு புத்தழகு ஊட்டுகிறது. தன்னுடைய உயர்ந்த தன்மையினுல் எளிதில் பாதிப்புக்கு உள்ளாகும் பரப்புகளுக்குப் பாதுகாப்பு அளித்து பளபளக்கச் செய்கிறது.

மற்ற வெள்ளைகளைப் போலன்றி நெரோலாக் அல்ட்ரா ஒயிட் வெள்ளை மட்டுமே நெடுங்காலத்திற்குப் பின்னும் குறைவாக மஞ்சள் பழுப்படைகிறது. இது ஒன்றே வெள்ளையிலும் வெள்ளை, எப்போதும் வெள்ளை—மிக அதிகமாக விற்பனையாகும் வெள்ளை எனுமல்.

நெரோலாக் ஸிந்தெடிக் எனுமல், நெரோலாக் அக்ரிலிக் எமல்ஷன் மற்றும் நெரோலாக் ஆயில் பௌண்ட் டிஸ்டெம்பர் இவை எல்லாம் பெயிண்ட் டெக்னலஜியைப் பற்றி அறிந்தும் தெரிந்தும் உள்ள கம்பெனியால் தயாரிக்கப்பட்டது. ஜப்பான், கன்ஸய் பெயிண்ட்ஸ் உடன் ஒருங்கிணைந்து இந்தியாவில் மாருதிக்காக முன்னேற்றமடைந்த பெயிண்ட் டெக்னலஜியைப் புகுத்தி இருக்கிறேம்.







**நெரோலாக் பெயிண்ட்ஸ்**

எந்த ரூபத்திலும் எந்த வண்ணத்திலும் மேம்பட்டது!



ULKA-GNP-2-85 TAM

# பெரியவங்க தப்பு செஞ்சா பெருமாள் செய்த மாதிரி!

-பாக்யராஜ் கிண்டல்



அன்புடன் உயர்திரு ஆசிரியர் அவர்களுக்கு!

பணிவான வணக்கத்துடன் பாக்யராஜ் எழுதுவது.

24.11.85ம் தேதிய கல்கி இதழ் கண்டேன். கேள்வி–பதில் பகுதியில் தீபாவளியன்று தங்களைப் பாதித்த நிகழ்ச்சி என்ன என்ற கேள்விக்கு, (அல்லது தாங்களாகவே தயாரித்த கேள்விக்கு) தங்களின் பதில் என்னைத் திகைக்க வைத்தது.

'பெரியவங்க தப்பு செஞ்சா பெருமாள் செஞ்ச மாதிரி–சின்னவங்க தப்பு செஞ்சா செருப்பிலேயே அடி'ன்னு ஊர்ப் பக்கம் ஒரு தெலுங்குப் பழமொழி இருக்கு.

தீபாவளியன்று நான் வீட்டைவிட்டு வெளியில் வரவேயில்லை. அதேபோல் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களும் தீபாவளிக்கு முன்னமே சின்ன வீடு படம் பார்த்து விட்டார்கள்.

தரமான தங்கள் பத்திரிகையின் இந்தத் தவறை பெருமாள் செய்த தவறாக ஜீரணிக்கிறேன்.

இன்னும் அன்புடன்
பாக்யராஜ்.



## தராசு சொன்னதில் தவறே இல்லை!

திரு பாக்யராஜ் அவர்களுக்குள்ள தர்ம சங்கடத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவர் கடிதத்தைத்தான் நம்மால் ஜீரணிக்க முடியவில்லை.

தீபாவளி, ஞாயிறு 10ம் தேதி இரவு; 11ம் தேதி அதிகாலை. இது அனைவரும் அறிந்த விஷயம். முதல்வர் படம் பார்க்க நுங்கம்பாக்கத்தில் உள்ள ப்ரிவியூ தியேட்டருக்கு வந்தது 10ம் தேதி மாலை என்பதும், அந்த வட்டாரத்தில் அனைவரும் அறிந்த ஒன்று.

முதல்வர் சினிமா பார்த்ததையோ, பாக்யராஜ் அவருக்குச் 'சின்ன வீடு' படம்போட்டுக் காட்டியதையோ நாம் ஆட்சேபிக்கவில்லை; ஆட்சேபிக்கவும் முடியாது; கூடாது. ஆனால் எதையும் காலம் நேரம் பார்த்துச் செய்ய வேண்டாமா?

ஒரு வார காலமாகவே தமிழகத்தில் கடின மழை, பயிர்கள் பாழ் என்று செய்திகள்; தவிர சனிக்கிழமை–9ம் தேதி வானம் பிளந்தது போல் தமிழகமெங்கும் மிக அதிகமான மழை. மீனவர்கள் மட்டுமின்றித் துறைமுகங்களும் எச்சரிக்கப்படுகின்றன. அன்றே அதாவது சனிக்கிழமை–9ம் தேதி மதியமே இன்ஸாட் செயற்கைக் கோள் கடுமையான புயல் தாக்கப் போவதை அறிவித்துவிட்டது. அந்த எச்சரிக்கை தமிழக அரசுக்கு உடனடியாகக் கிடைத்திருக்க வேண்டும். இன்ஸாட் எடுத்த புகைப்படம் மறுநாள் ஞாயிறு காலை ஹிந்து நாளிதழில் பிரசுரமாகியும் விட்டது.

இந்தச் சூழ்நிலையில் ஞாயிறு 10ம் தேதி மாலை முதல்வர் சினிமா பார்க்கச் செல்வதென்பது அவருக்கும் சரி, அவரை அழைத்துப் படம் போட்டுக் காட்டிய பாக்யராஜுக்கும் சரி பெருமை சேர்ப்பதாக இல்லை. எம்.ஜி.ஆர். சினிமா பார்த்தபோது மின் சப்ளை துண்டிக்கப்படக் கூடாதே என்பதற்காக மின்வாரியம் முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளை எடுத்திருந்தது. ஆனால் பயங்கரப் புயல் வீசப் போவதை அறிந்திருந்தும் தமிழக மக்களைக் காக்க, தமிழக அரசு முன்னெச்சரிக்கை நடவடிக்கைகளை எடுக்கவில்லை! முதல்வர் இச்சூழலில் சினிமா பார்த்துக் கொண்டிருந்தார்! 10ம் தேதியான தீபாவளி இரவில் நடந்த இந்த நிகழ்ச்சி பற்றி 11ம் தேதி தீபாவளி காலையில் கேள்விப்பட்டபோது, என் மனம் மிகவும் பாதிக்கப்படத்தான் செய்தது.

கேள்விகளைத் தயாரிக்கும் பழக்கம் எங்களுக்கு இல்லை. மேற்படி கேள்வி எழுதப்பட்ட தபால் கார்டை எப்போது வேண்டுமானாலும் நமது காரியாலயத்துக்கு வந்து பாக்யராஜ் சரிபார்த்துக் கொள்ளலாம்.

திரு பாக்யராஜ் கூறுகிற பழமொழி, திரை உலகப் பெரிய மனிதரான அவருக்கு மட்டுமின்றி அரசியலில் பெரிய மனிதரான முதல்வருக்கே கூடப் பொருந்தும்.

— ஆசிரியர்.

# உங்கள் குழந்தையின் எதிர்காலம்?



முன்பு ராஜாஜி கொண்டு வந்த கல்வித் திட்டத்துக்கு இரண்டு அடிப்படை நோக்கங்கள் இருந்தன. ஒருவேளை படிப்பு, ஒருவேளை வேலை என்ற 'ஷிப்ட்' முறைப்படி அன்றிருந்த பள்ளிக் கூடங்கள், ஆசிரியர்களைக் கொண்டே இரு மடங்கு மாணவர்களுக்குக் கல்வி போதிக்கலாம் என்பது ஒன்று. அனைவருக்கும் கல்வி புகட்டுதல் என்ற அரசியல் சாசன லட்சியத்தை நோக்கி இதன் மூலமே துரித நடை போட முடியும். இரண்டாவது நோக்கம் பிள்ளைகள் ஏட்டுப் படிப்புடன் கூட தொழிலும் பயில்வதினால் தன்னம்பிக்கை பிறக்கும். ஏட்டுக் கல்வியினால் ஒருவேளை மாணவனுக்குப் பயன் ஏற்படாவிட்டாலும் தொழில் திறன் அவன் வாழ்க்கைக்குக் கைகொடுக்கும். இந்த உயர்ந்த நோக்கங்கள் அரசியல் காரணங்களுக்காகப் புறக்கணிக்கப்பட்டு ராஜாஜி திட்டத்துக்குக் 'குலக் கல்வித் திட்டம்' என்று முத்திரை குத்தப்பட்டது. கடைசியில் அந்தக் கல்வித் திட்டம் கைவிடப்பட்டு மெகாலே கல்வித் திட்டமே இன்றளவும் தொடர்கிறது.

மெகாலே வகுத்த கல்வித் திட்டமானது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை இங்கு ஸ்திரப்படுத்திக் கொள்வதற்காகவும் ஆட்சிக்கு உதவும்படியான குமாஸ்தாக்களை உருவாக்குவதற்காகவுமே பிரதானமாக வகுக்கப்பட்டது. எனவே சொந்தக் காலில் நிற்பதற்கான தன்னம்பிக்கை ஊட்டும் கல்வி முறையை அவர் வகுக்காததில் வியப்பில்லை. நாடு சுதந்திரம் பெற்ற பிறகு இதனை மாற்ற வேண்டும் என்று அறிஞர்கள் பலர் கூறியதெல்லாம் எடுபடவேயில்லை. 38 ஆண்டுகளுக்குப் பிறகு இப்போதுதான் இந்தக் கல்வித் திட்டத்தில் மாறுதலை ஏற்படுத்தியே ஆக வேண்டும் என்று நம்பிக்கை கொண்ட ஒரு பிரதமர் நமக்குக் கிடைத்திருக்கிறார். ஒரு கல்வி அறிக்கையைத் தயாரித்து, அதனை விமர்சிக்கவும் புதிய யோசனைகள் கூறவும் அறிஞர்களையும் பொது மக்களையும் மத்திய அரசு கேட்டுக் கொண்டிருக்கிறது.

சுதந்திர பாரதத்தில் தொழில் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்து, அதனை அமுல்படுத்தவும் துணிந்த முதல் மனிதரான ராஜாஜியின் பிறந்த தினத்தினையொட்டி ராஜீவின் கல்வி அறிக்கை பற்றியும் புதிய கல்விக் கொள்கை எவ்விதம் அமையலாம் என்பது குறித்தும் இங்கு இரு கல்வித்துறை நிபுணர்கள் பேசுகிறார்கள்:

## ராஜீவ் நிச்சயம் வெற்றி பெறுவார்!

**பாண்டிச்சேரி மத்திய பல்கலைகழகத் துணைவேந்தர் கே. வெங்கடசுப்பிரமணியம், 'புதிய கல்விக் கொள்கை' பற்றி உற்சாகமாகக் கூறுகிறார்:**

"பல வருடங்களாக நமது அரசியல்வாதிகளும் சரி, கல்வியாளர்களும் சரி, கல்வி முறை மாற்றியமைக்கப்பட வேண்டும் என்று கூறி வருகிறார்கள். ராஜீவ் காந்தியும் தமது பதவிக் காலத்தின் முதல் முந்நூறு நாட்களில் கல்வி பற்றி பன்னிரண்டு முறை பேசியுள்ளார்! எல்லோரும் பேசுவதோடு விட்டுவிட்டார்கள். ஆனால் ராஜீவ் காந்தி துணிந்து பூனைக்கு மணி கட்டுவார் என்றே உறுதியுடன் இருக்கிறேன். ராஜீவ் காந்தி, கல்வித் துறையை, ஒரு கேபினட் அந்தஸ்தில் உள்ள மந்திரிக்குக் கீழே கொடுத்திருப்பதிலிருந்தே கல்விக்கு அவர் எவ்வளவு முக்கியத்துவம் தருகிறார் என்பது தெரிகிறது.

சுதந்திரம் பெற்றதிலிருந்து இதுவரை கல்விக்காக 6,300 கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் என்ன பயன்? இந்தத் தொகையில் எண்பது சதவீதம் ஆசிரியர்களுக்குச் சம்பளமாகப் போய்விடுகிறது. அப்புறம் ஆராய்ச்சிக் கூடம், உபகரணங்கள் நூல் நிலையங்கள், புதிய கட்டடங்கள் ஆகிய

வற்றுக்கு ஏது பணம்? தோட்டத்தில் பாதி கிணறு என்ற கதைதான்.

உலகெங்கும் மாறி வரும் விஞ்ஞான முன்னேற்றங்களைக் கணக்கெடுத்துக் கொண்டு, நமது கல்வி முறையை 21ம் நூற்றாண்டுக்கு ஏற்றவாறு மாற்றியமைப்பதே ராஜீவின் நோக்கம். இதை எதேச்சாதிகாரமாகச் செய்யாமல் கல்வியாளர்களின் சிந்தனைக்கு, ஆலோசனைக்கு விட்டிருப்பது பாராட்டுக்குரிய ஒன்று. நமது குழந்தைகளை நில உலகத்திலிருந்து நிலா உலகத்துக்கு அழைத்துச் செல்ல ஆசைப்படுகிறார் பிரதமர்.

நமது மாணவர்கள் நாலு பேர் ஒன்று சேர்ந்தால் அறிவியலைப் பற்றியோ அல்லது வேறு ஏதேனும் ஆக்கபூர்வமான விஷயங்களையோ பேசுவதில்லை. சினிமா, அரசியல் இல்லையேல் விளையாட்டு பற்றித்தான் பேசுவார்கள். எல்லோருக்கும் பி.ஏ., எம்.ஏ. பட்டம் வாங்க வேண்டும் என்று ஆசை இருக்கிறது. இதனை ஒரு 'டிப்ளமா நோய்' என்று இங்கிலாந்தில் உள்ள சசக்ஸ் பல்கலைக்கழக ஆராய்ச்சியொன்று இகழ்ந்துரைக்கிறது. தொழிற்கல்வி தேவை என்கிறார் நமது பிரதமர். தன் கையே தனக்கு உதவியாக இருக்க வேண்டும். நாட்டில் உயர்ந்தவன்—தாழ்ந்தவன் என்றெல்லாம் கிடையாது. முற்பட்ட குலத்தில் பிறந்த ஒருவன் தச்சு வேலை கற்றுக் கொள்ளலாம். அதேபோல் பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள், இப்போது முற்பட்ட சமுதாயத்தினர் தான் செய்ய வேண்டும் என்று இருக்கிற தொழில்களைச் செய்யலாம்.

மேல்நாட்டுக் கல்வியாளர்களான மகரன்கோ (ரஷ்யா) யூகேன் ஸ்டான்லி (அமெரிக்கா) போன்றவர்கள் பல வருடங்களுக்கு முன்பே, கல்வியின் பெரும்பகுதி, தொழிற் கல்வியாக இருக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். இப்போது நமது கல்வி குமாஸ்தாக்களைத்தான் உற்பத்தி செய்கிறது. இதற்கு நல்ல தரமான எஸ்.எஸ்.எல்.ஸி. கல்வியே போதும். கல்லூரிப் படிப்பு வேஸ்ட். +2 லெவலில் பள்ளியிலிருந்து வெளியே போகும் பையன் தனக்குப் பிடித்தமான ஏதேனும் ஒரு தொழிலில் பயிற்சி பெற்று. தன் கையே தனக்குதவி என்ற நிலைக்கு வந்துவிட்டால், பட்டம் பெறும் மோகமும் கல்லூரியில் சேரப் போட்டியும் குறையும். மெய்யாலுமே ஆராய்ச்சி மனப்பான்மை உள்ளவர்கள், உயர் கல்வியில் ஈடுபாடு உள்ளவர்கள் மட்டுமே கல்லூரிகளில் இடம் பிடிக்க முயலுவார்கள்.

வேலைக்கும், கல்விக்கும் உள்ள தொடர்பைக் கத்தரித்து விடவேண்டும். இன்றைக்குப் பல ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் கூட வெறும் 'ஃபைல்களை நகர்த்துகிறவர்'களாக இருக்கிறார்கள். ஆக்கபூர்வமாகச் சிந்தித்துச் சுயேச்சையாக முடிவெடுத்து இயங்குகிறவர்களாக இருப்பதில்லை. இதற்கு ஐ.ஏ.எஸ். படிப்பு எதற்கு? பி. காம் படிப்பதுகூட வங்கி வேலைக்கு ஓரளவுதான் பொருந்துகிறது எனவே படிப்பு என்னவாயிருந்தாலும் வேலையை எப்படி செய்கிறான் என்று கவனித்து வேலைக்குப் பொருத்தமான ஆட்களை நியமிக்க வேண்டும்.

படிக்கும்போதே நமது மாணவர்களைத் தொழிற்சாலைகளோடு தொடர்பு வைத்துக் கொள்ளச் செய்ய வேண்டும். ஆட்டோமொபைல் தொழிற்சாலையிலோ அல்லது ஒரு அச்சகத்திலோ பள்ளி நேரத்தில் பாதியையாவது செலவழிக்க வகை செய்ய வேண்டும்.

புதிய கல்விக் கொள்கையைப் பற்றிச் சொல்ல வரும்போது நமது ஆசிரியர்களின் நிலையைச் சொல்லாமல் விடுவது நியாயமில்லை. இன்றைக்கு என்ன நடக்கிறது? பயிற்சிக் கல்லூரியை விட்டு வெளிவரும் ஆசிரியர் வேலை கிடைத்ததும் 'அவ்வளவு தான்' என்று உட்கார்ந்து விடுகிறார். தன் அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும், கல்வி போதனையில் புதிய உத்திகளைத் தெரிந்து கொள்ள வேண்டும், அதன்படி பாடம் நடத்த வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு வருவதில்லை. போதாக்குறைக்கு இன்றைய அரசியல் சூழலில் ஆசிரியர்கள் கல்வி சொல்லித் தருவதைத் தவிர மற்ற எல்லா வேலைகளையும் செய்யும்படி நிர்பந்திக்கப்படுகிறார்கள். இது மாபெரும் தவறு. எரிகிற விளக்கைக் கொண்டுதான் மற்ற விளக்குகளை ஏற்றி வைக்க முடியும். ஒருமுறை அறிஞர் அண்ணா ஒரு பள்ளி விழாவில் பேசும்போது, ''ஆசிரியர்கள் இன்று ஏங்கினால் நாடு நாளை ஏங்கும், ஆசிரியர்கள் தேங்கினால் நாடு நாளை தேங்கும், ஆசிரியர்



கள் இன்று தூங்கினால் நாடு நாளை தூங்கும்" என்று ஆசிரியர் பணி பற்றித் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

இன்றைய கல்வி, மாணவர்களைப் புத்தகப் புழுக்களாக மாற்றிக் கொண்டிருக்கிறது. அறிவைப் பெறுவதற்குக் கல்வி முறை ஒரு வழிதானே தவிர அதுவே முழு அறிவையும் கொடுத்துவிடாது. பாடப் புத்தகங்கள் அறிவில் இருபது சதவீதத்தைத்தான் தருகின்றன. தலை சிறந்த ஆசிரியர்கூட அந்த இருபது சதவீதத்தில் எண்பது சதவீதத்தைத்தான் சொல்லித் தருகிறார். மிகச் சிறந்த மாணவன் கூட அந்த எண்பது சதவீதத்தில் இருபது சதவீதத்தைத்தான் கிரகித்துக் கொள்கிறான். இந்த நிலையில் அறிவு வளர்ச்சிக்கும் புத்தகங்களைக் கட்டி மாரடிக்கும் நமது கல்வி முறைக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது. கல்வி என்பது பரீட்சையில் தேறுவது மட்டுமல்ல; அறிவைப் பெறுவதே. அதற்கு எல்லை ஏது?

இன்றைக்கு நமது கல்வியின் நிலை என்ன? சிவகாசிச் சிறுவன், நாள் ஒன்றுக்கு ஐந்து ரூபாய்சம்பாதித்தால்போதும்என்றுவேலைக்குச் சென்றுவிடுகிறான். 'அவன் படிச்சிட்டு என்ன பண்ணப் போறான்?' என்று பிள்ளைகளை மாடு மேய்க்க அனுப்பும் அப்பாக்கள் ஏராளம். இதற்கெல்லாம் அவர்கள் காரணமில்லை. வாழ்க்கைக்குப் பயன்படாத நமது கல்வி முறைதான் காரணம்.

நமது பிரதமர் அவர்களின் நோக்கப்படி இன்னும் பதினைந்து வருடங்களில், கல்வியை நவீனப்படுத்த வேண்டும். இதற்கு வீடியோ, டி.வி., கம்ப்யூட்டர்கள் போன்றவை பெருமளவில் பள்ளிகளில் தேவைப்படும். பையன்கள் படிப்பதோடு தொழிற்சாலைகளில் பயிற்சியெடுத்துக் கொள்ள அனுப்பப்படுவார்கள். வாழ்க்கையோடு தொடர்புள்ள கல்வியாகமாற்றப்படும். இந்தப்புதிய அமைப்பில் ஆசிரியர்கள் பங்கு முன்னைப்போதையும் விட முக்கியத்துவம் பெறும். சவாலை ஏற்றுச் செயல்படும் பொறுப்பு ஆசிரியர்களுக்கு இருக்கிறது.

கல்வி முறையை வாழ்க்கையோடு சம்பந்தப்படுத்துவது, தேசபக்தி தேசிய ஒருமைப்பாடு போன்றவைகளை ஊட்டுவது மூளையால் மட்டுமின்றி சரீரத்தாலும் உழைக்க ஆர்வத்தைத் தூண்டுவது ஆகிய இவையே நாம் செய்ய வேண்டிய காரியங்கள்.

# ராஜீவ் அவசரப் பட வேண்டாம்

பேராசிரியர் ராமசாமி லண்டன் பொருளாதாரக் கல்விப் பள்ளியில் படித்து டாக்டர் பட்டம் பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பொருளாதாரத் துறையின் தலைவராக இருந்து ஓய்வு பெற்றவர். அவர் சொல்கிறார்:



'இந்த மெகாலே கல்விமுறை, வடிகட்டி, வடிகட்டி சிறந்த மாணவர்களைத் தேர்ந்தெடுக்க உதவுகிறது. ஒரு புத்திசாலித்தனமான கல்வியைத் தருகிறது என்று சொல்லலாம். பரீட்சையை லட்சியமாகக் கொண்டு படிக்கும் கட்டாயத்தில் இருக்கிறார்கள் மாணவர்கள். ஆனால் இந்த வடிகட்டும் முறைகூடத் தற்போது இல்லை! ஒன்றாம் வகுப்பிலிருந்து ஐந்தாம் வகுப்புவரை பையனை பெயில் ஆக்கக்கூடாது என்று அரசு கூறியிருப்பதாகத் தெரிகிறது. இப்படியானால் படிப்பில் எப்படி நாட்டம் ஏற்படும்? ஐந்தில் வளையாதது பதினைந்தில் எப்படி வளையும்?

பதினொன்று வயதிற்குள், படிப்பவர்களில் 77 சதவீதம் பேர் நடுவிலேயே விட்டு விட்டுப் போய்விடுகிறார்கள். அவர்களுக்காக அரசு செலவழிக்கும் பணம் வீணாகிறதல்லவா? இதைச் சீர்ப்படுத்த வேண்டாமா? 1981ல் ஐந்து முதல் பத்து வயதுள்ள மாணவர்கள் 15 கோடிப் பேர் பள்ளிக்குச் சென்றிருக்க வேண்டும். ஆனால் ஒன்பது கோடி மாணவர்கள்தான் பள்ளிக்குச் சென்றார்கள். 1990ல் பதினெட்டுக் கோடி மாணவர்கள் ஆரம்பக் கல்வியில் சேர வேண்டும். ஆனால் பதினொரு கோடி மாணவர்கள் படிக்கத்தான் வசதி இருக்கிறது. தேவையான அளவு பள்ளி வசதிகளைப் பெருக்க மட்டுமே, புதிய கல்விக் கொள்கை வழிவகுக்குமோ என்ற அச்சம் எனக்கு ஏற்படுகிறது. மூவாயிரம் கோடி ரூபாய் செலவழிக்கப் போகிறார்களாம். எதற்கு? பள்ளிக்கூடங்கள் கட்டவா அல்லது

ஆசிரியர்களுக்குச் சம்பளம் கொடுக்கவா? இதுதான் நிலைமை என்றால் காண்ட்ராக்டர்களுக்குக் கொண்டாட்டம்தான். மூன்றில் ஒரு பகுதி மாணவர்கள் மலைப்பகுதிகளில் வசிக்கின்றனர். குடும்பத்துக்கும் பையனின் பள்ளிப் படிப்புக்கும் தொடர்பே இல்லை. குடும்பத்துக்குப் பையனின் படிப்பில் ஈடுபாடில்லை. பையனுக்குக் குடும்பத்தில் ஈடுபாடு இல்லை. ஆரம்பக் கல்வியில், விட்டு ஓடுபவர்களின் எண்ணிக்கை குறைய வேண்டுமென்றால் ஐந்து வயதிலிருந்து பத்து வயதிற்குள் படிக்கும் மாணவனோடு அவன் குடும்பமும் பள்ளிக்கு வரவேண்டும்! இதன் மூலம் கல்வியின் மதிப்பு பிள்ளையால் அப்பாவுக்கு விளங்கும். முதியோர் கல்வி என்ற பெயரில் நாம் செலவழிக்கும் பணமும் மிச்சமாகும்! இது முறைசேராக் (non-formal) கல்வியாக இருக்க வேண்டும். அடுத்த ஐந்து வருடத்திற்கு — அதாவது பத்து வயதிலிருந்து பதினைந்து வயது வரை — இரண்டாம் நிலை கல்விப் பயிற்சி தர வேண்டும். யாராவது படிப்பைப் பாதியில் விட்டுவிட்டு ஓடினால் அதற்கு ஆசிரியரே பொறுப்பு என்று கண்டிப்பாகக் கூற வேண்டும்!

வறுமையை ஒழிக்க வேண்டும். இன்று பால் கொடுத்தால், உணவு போட்டால் பள்ளிக்கு மாணவர்கள் வருகிறார்கள். இந்த நிலையை மாற்றி, சமூக விழிப்புணர்ச்சி ஏற்படவும் வறுமைக் கோட்டுக்கு மேலே மக்கள் உயரவும் அரசு ஆவன செய்தால் பள்ளியிலும் வருகை பெருகும், நடுவில் விட்டு விடுபவர்களும் இருக்க மாட்டார்கள்.

புதிய கல்விக் கொள்கைப்படி தொழிற் கல்விக்கு முன்னுரிமை தரப்படும் என்று கூறப்படுகிறது. அது எத்தகைய் தொழில் கல்வியாக இருக்கும்? எந்த வகுப்பிலிருந்து தொழிற் கல்வியைத் தொடங்குவதாக உத்தேசம்? பத்தாவது பாஸ் செய்தவுடன் என்றால் இப்போதுள்ள தொழிற் கல்விக் கூடங்களின் நிலை என்ன? எல்லோரையும் தொழிற் கல்வி பயிலச் சொல்வீர்களா? அல்லது அதிலும் வடிகட்டுவீர்களா? நாட்டில், வேலை வாய்ப்பு நிறைய உள்ள தொழில்கள் எவை என்று ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? வேலை வாய்ப்பு அதிகம் உள்ள தொழிற் பயிற்சிக்கு ஏராளமான மாணவர்கள் போட்டியிடும்போது தேர்ந்தெடுப்பது எப்படி?

பத்தாவது தேர்வில் அவன் பெறும் மதிப்பெண்களின் அடிப்படையில் மாணவன் தொழிற் பயிற்சிக்குச் செல்வதா அல்லது பட்டப் படிப்புக்குச் செல்ல மேலும் பயிற்சியளிப்பதா என்பதை முடிவு செய்ய வேண்டும். இங்கிலாந்தில் 'O' லெவல், 'A' லெவல் என்று உண்டு. 'O' லெவலில் உள்ளவர்கள் தொழிற்பயிற்சிக்கு செல்வார்கள். 'A' லெவலில் உள்ளவர்கள் பல்கலைக்கழகப் படிப்புக்குச் செல்வார்கள்.

என்னதான் பள்ளிக்கூடங்கள் கட்டினாலும், ஆசிரியர்களை அமர்த்தினாலும் மாணவர்கள் படிக்க முன்வர வேண்டும். 'குதிரையைத் தண்ணீர் அருகில் கொண்டு போய் முகத்தை நீரில் முக்கினாலும் அதற்கு இஷ்டம் இருந்தால்தான் குடிக்கும். ஊக்கத்தை, ஆக்கத்தை மாணவனுக்கு அளித்தால்தான் தொடர்ந்து படிப்பான். நான் படிக்கும் சமயத்தில், பாய்முடைதல், தறி போடுதல் ஆகிய வேலைகளைப் பள்ளியில் சொல்லித் தருவார்கள். ஆனால் மாணவர்கள் உற்சாகம் இல்லாமல் கடனேயென்றுதான் அந்த வகுப்புகளுக்குச் செல்வார்கள். எனவே அடிப்படையில் மன நிலை மாறவேண்டும்.

துரதிர்ஷ்டவசமாக நமது நாட்டில் பொருளாதாரம் படித்தவன், பொறியியல் படிக்க மாட்டான். ஆனால் மேல்நாட்டில் இந்த நிலை இல்லை. சாதாரண கட்டுமான வேலை செய்யும் தொழிலாளி கூட மிக உயர்ந்த கட்டட நிபுணன் ஆக வரமுடியும் என்ற நிலை உருவாக நமது கல்வி முறை உதவ வேண்டும். ஸ்லோகம் என்னும் கட்டடக்கலை நிபுணர்தான் பக்ரா நங்கல் அணையை உருவாக்கியவர். இவர் சாதாரணத் தொழிலாளியாக வாழ்க்கையைத் தொடங்கியவர்.

வோட்டுக்கள் வாங்குவதற்காக, 'கல்வியில் புரட்சி செய்துவிட்டேன்' என்று ஏதாவது ஏடாகூடமாக ராஜீவ் செய்துவிடக் கூடாது. கல்லூரிக் கல்வியைப் பற்றி இந்த 'கல்விக்குச் சவால்' என்ற சுற்றறிக்கையில் ஒன்றும் சொல்லப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

— ப்ரியன்

அட்டை வண்ணப்படங்கள்: யோகா

- பாதுகாப்புத்துறைக்கு அடுத்தபடியாக கல்வித் துறைக்குத்தான் பட்ஜெட்டில் அதிகமாக பணம் ஒதுக்கப்படுகிறது.
- இந்தியாவில் —
  - 19 சதவீத ஆரம்பப் பள்ளிகளில் கட்டடங்கள் கிடையாது.
  - 41 சதவீதப் பள்ளிகளில் கரும் பலகை இல்லை.
  - 72 சதவீதப் பள்ளிகளில் நூலகங்கள் கிடையாது.
  - 53 சதவீதப் பள்ளிகளில் மாணவர்களுக்கு விளையாட்டு வசதிகள் இல்லை.

  கல்வியறிவு பெற்றவர்கள் 36.2 சதவீதம்.
- 1947ல் 20 பல்கலைக்கழகங்கள், 700 கல்லூரிகள் இருந்தன. அதில் படித்தவர்கள் நான்கு லட்சம் பேர்.

  இன்று 140 பல்கலைக்கழகங்கள், 5246 கல்லூரிகள் இருக்கின்றன. படிப்பவர்கள் எண்ணிக்கை 34 லட்சம்.

ஒரு மணி நேரம் என்னை இந்தியாவின் சர்வாதிகாரியாக நியமித்தால் நான் முதலாவதாக நாடு முழுவதும் எந்தவித நஷ்ட ஈடுமில்லாமல் மதுக்கடைகளை மூடுவேன்.
இப்படிச் சொன்னவர் யார் தெரியுமா? மகாத்மா காந்தியடிகள்தாம்!
தகவல்: பூங்குழலி.

# ஒரு மறக்க முடியாத அநுபவம்

**12**.10.1985 சனிக்கிழமை மாலை 4 மணி அளவில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீமத் சந்திர சேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்களைச் சந்திக்கச் சென்றிருந்தேன்.

பரமாச்சார்ய ஸ்வாமிகள் அவர்களுக்கு என்னிடத்தில்எப்பொழுதும்ஒருதனிப்பட்ட அன்பு உண்டு. அன்றும் புன்முறுவல் பூக்க, என்னை வரவேற்று, எதிரே அமரப் பணித்தார்கள்.

இவ்வாண்டில்வெளிவந்த 'கம்பன் கண்ட சமரசம்', 'மூன்று வினாக்கள்' ஆகிய என்னுடைய இரு நூல்களையும் அவர்கள் பார்வைக்காக எடுத்துச் சென்றிருந்தேன். அவர்கள் முன் வைத்தேன்.

'கம்பன் கண்ட சமரசம்' என்ற நூலின் அட்டைப் படத்தைப் பார்த்துவிட்டு, அதில் இடம் பெற்றிருக்கும் 'சமரசம்' என்ற சொல்லில் தன் விரல் பதித்து, "சமய ஒருமைப் பாட்டைப் பற்றி எழுதியிருக்கிறீர்களா?" என்று கேட்டார்கள்.

"கம்பன் காப்பியத்தில் குறிப்பாகச் சைவ வைணவப் பூசல்களைக் கண்டிக்கும் இடங்களையும், பொதுவாகச் சமய ஒருமைப் பாட்டை வலியுறுத்தும் இடங்களையும் அந்தக் கட்டுரையில் எடுத்துக் காட்டியிருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு, நூலின் 22 ஆம் பக்கத்தில் இடம் பெற்றுள்ள அடியிற்கண்ட பாடல் பகுதியைப் படித்துக் காட்டி விளக்கினேன்.

அப்பகுதி,

"அரன் அதிகன்; உலகு அளந்த அரி
அதிகன் என்று உரைக்கும் அறிவிலோர்க்குப்
பரகதி சென்று அடைவு அரிய பரிசே
போல்.....

(கிஷ்கிந்தா காண்டம்—நாடவிட்ட படலம் 24)

என்பதாகும்.





''பார் முதல் பஞ்ச பூதமும், வேறுபாடுற்ற வீக்கம்'' என்று ஒவ்வொரு சொல்லாக நிதானமாகச் சொல்லி, ''நினைவிற்கு வருகிறதா?'' என்று கேட்டார்கள்.

''வேறுபாடுற்ற வீக்கம்' நினைவிற்கு வருகிறது. மற்ற சொற்கள் நினைவிற்கு வரவில்லை'' என்று சொன்னேன்.

''கை வில் ஏந்தி என்றும் அப்பாடலில் வரும்'' என்று சொன்னார்கள். அப்படி அவர்கள் சொன்ன உடனேயே, என் நூலின் 27 ஆம் பக்கத்தில் இடம் பெற்றிருக்கும்,

''மூலமும், நடுவும், ஈறும் இல்லதோர் மும்மைத்து ஆய,
காலமும் கணக்கும் நீத்த காரணன் கை வில் ஏந்தி,
சூலமும் திகிரி சங்கும், கரகமும் துறந்து தொல்லை
ஆலமும்,மலரும்,வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்''

(சுந்தர காண்டம்—பிணி வீட்டு படலம்—80) என்ற பாடலை படித்து விளக்கினேன்.

இந்தப் பாடலில் 'கைவில் ஏந்தி' என்ற தொடர் இடம் பெற்றிருந்தபோதிலும், 'பார் முதல் பஞ்ச பூதமும் வேறுபாடுற்ற வீக்கம்' என்ற தொடர் இடம் பெற்றிலது.

எனவே, பெரியவர்கள் நினைவிற்குக் கொண்டு வர முயன்ற பாடல் இது அன்று என்பது தெளிவாயிற்று.

அதனைக் கேட்டுவிட்டு, ''இது உவமானமாகத்தானே கொடுக்கப்பட்டுள்ளது. உவமேயம் எது?'' என்று கேட்டார்கள். எனக்கு நினைவிற்கு வரவில்லை. பெரும்பாலோர் இந்த உவமானத்தைத்தான் வற்புறுத்துவார்களே தவிர உவமேயத்தை வலியுறுத்துவதில்லை. மற்றவர்களைப் போலவே நானும் உவமேயத்தில் கவனம் செலுத்தியிருக்கவில்லை.

''நாடவிட்ட படலத்தில் இது இடம்பெறுவதால் ஏதோ மற்றொரு இடத்தைச் சேர்வதில் உள்ள கஷ்டம் உவமேயமாக இருக்கும்'' என்று சொல்லிவிட்டு, ''மடத்தில் கம்ப ராமாயணப் பிரதி இருந்தால் அதிலிருந்து பார்த்துவிடலாம்'' என்றும் சொன்னேன்.

அதனோடு அமையாமல் நூலின் 17 ஆம் பக்கத்தில் இடம் பெற்றிருக்கும்.

''காலையின் நறுமலர் ஒன்றக் கட்டிய
மாலையின் மலர்புரை சமய வாதியர்
சூலையின் திருக்குஅலால் 'சொல்லுவோர்க்கு எலாம்
வேலையும் திரையும்போல் வேறுபாடு இலான்''

(இரணியன் வதைப் படலம் 77) என்ற பாடலையும் விளக்கினேன்.

இதனைக் கேட்டவுடன் இதனோடு ஒத்த ஒன்று அவர்களுக்கு நினைவிற்கு வந்திருக்க வேண்டும். அதனை எடுத்துச் சொல்ல இயலவில்லையே என்று கையினால் தம் தலையில் தட்டிக் கொண்டார்கள். அதனை எப்படியாவது நினைவில் கொண்டு வந்து சொல்லிவிட வேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டார்கள்.

மீண்டும், ''கம்ப ராமாயணப் பிரதி கிடைத்தால் இப்பாடலைக் கண்டு பிடித்துவிடலாம்'' என்று சொன்னேன்.

ஆட்களை அனுப்பி, யாரிடம் கம்ப ராமாயணப் பிரதி இருக்கிறது என்று தேடிக் கொண்டு வரப் பணித்தார்கள்.

செந்தில் நாதன் என்பார் வீட்டிற்குச் சென்று அங்கிருந்து, 'பால இராமாயணம்' 'பால பாரதம்' என்ற இரு நூல்களை மடத்து ஊழியர்கள் கொணர்ந்தனர்.

அவற்றைப் பார்த்துப் பெரியவர்கள் ஒதுக்கிவிட்டார்கள்.

பின்னர் ''பொன் விழா மலர்' இருக்கிறதா? எடுத்து வாருங்கள்'' என உத்திரவிட்டார்கள். ''மறுபதிப்பு ஆகி இருக்கிறது; இருக்கும். கொண்டு வந்துவிடலாம்'' என்றவாறு ஆட்கள் கொணரப் புறப்பட்டனர்.

இந்த இடை நேரத்தை வீணாக்க வேண்டா என்றும், பெரியவர்களிடமிருந்து சில செய்திகளைத் தெரிந்து கொள்ளலாம்; கொள்ள வேண்டும் என்றும் கருதி, அவரிடம் சில கேள்விகளைக் கேட்டேன்.

நான்: ஹிந்து மதம் என்ற பெயர் வெகு சமீப காலத்தில்தானே வந்திருக்க வேண்டும்?

பெரியவர்கள்: சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வந்ததுதான்.

நான்: அப்படியானால் பழங்காலத்தில்—வேத உபநிஷத் காலங்களில் இம்மதத்திற்கு என்ன பெயர்?

பெரியவர்கள்: பெயரே இல்லை.

நான்: சனாதன தர்மம் என்ற பெயர் அல்லவா?

பெரியவர்கள்: அல்ல. 'சனாதன தர்மம்' என்று பாரதத்தில் காணப்படுகிறது. அங்கே தர்மம் என்ற சொல்லுக்குச் சமயம் என்பது பொருள் அல்ல. நல்ல செயல்; நற் கருமம் என்பதுதான் பொருள்.

நான்: அப்படியானால் சனாதனம் என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

பெரியவர்கள்: நன்மையானது; நிலை பெற்று இருப்பது, மறையாதது என்பன பொருள்கள்.

நான்: அப்படி என்றால் இப்பொழுது ஹிந்து மதம் என்று கூறப்படுவதற்கு முற்காலத்தில் பெயரே இல்லையா?

பெரியவர்கள்: பெயரே இல்லை. அது ஒன்று மாத்திரமே இருந்த பொழுது பெயர் எதற்கு? ஒன்றுக்கு மேற்பட்டன இருக்கும் பொழுதுதான் மற்றவற்றில் இருந்து இதனைக் குறிப்பிட்டுக் காட்டப் பெயர் வேண்டும். ஒன்றாகவே இருப்பதற்குப் பெயர் தேவை இல்லை. நாலைந்து இஸ்மாயில்கள் இருக்கும் பொழுதுதான் உங்களைக் குறிப்பிடுவதற்கு, எம். எம். இஸ்மாயில் என்று சொல்ல வேண்டும்.

இவ்வாறு பேசிக் கொண்டு இருந்ததோடல்லாமல் 'மூன்று வினாக்கள்' என்ற நூலை எடுத்துப் பெரியவர்கள் பிரித்துப் பார்த்துப் படிக்கத் தொடங்கினார்கள்.

இந்த நிலையில் 'பொன் விழா மாலை' பிரதி வந்தது.

அது கும்பகோணம், 'அத்வைத சித்தாந்த சபை யின் பொன் விழாவிலே வெளியிடப் பெற்றது. 'அத்வைத சித்தாந்தப் பொன் விழா மாலை' என்ற பெயரினது.

அந்நூலைப் பெற்றதும் பெரியவர்கள் அதன் தாள்களைப் புரட்ட ஆரம்பித்தார்கள்.

வேறு பல நூல்களில் அத்வைதம் குறிப்பிடப் பெற்றிருப்பதைப் பற்றிய பல கட்டுரைகளைக் கொண்ட மாலை அது.

அம்மாலையில் 114 ஆம் பக்கத்தில் 'கம்ப ராமாயணத்தில் அத்வைதம்' என்ற தலைப்பில் வெ. சா. ஸ்ரீனிவாசன் என்பார் ஒரு கட்டுரை எழுதி இருக்கிறார். அதில் கம்ப ராமாயணத்தில், சுந்தர காண்டத்தில் காணப் பெறும் 'கடவுள் வாழ்த்துப் பாடல்' கொடுக்கப் பெற்றிருந்தது.

அதுவாவது,

அலங்கலில்தோன்றும்பொய்ம்மை அரவு
என பூதம் ஐந்தும்
விலங்கிய விகாரப்பாட்டின் வேறுபாடு
உற்ற வீக்கம்,
கலங்குவது எவ்வரைக் கண்டால்? அவர்
என்பர் கைவில் ஏந்தி
இலங்கையில் பொருதார் அன்றே, மறை
களுக்கு இறுதி ஆவார்.

(சுந்தர காண்டம்—கடல் தாவு படலம்—1)
(மறைகளுக்கு இறுதி—வேதாந்தம், அலங்கல்—மாலை; அரவு—பாம்பு; பொருதார்—யுத்தம் செய்தார்.)

அஃதாவது உண்மைப் பொருளாகிய மாலையை உள்ளபடி கண்டால் முன் அம் மாலையிலே தோன்றிய தோற்றப் பொருளாகிய பாம்பு காணப்படாது நீங்குதல் போல, உண்மைப் பொருளாகிய, எவரைக் கண்ட மாத்திரத்தில் நிஜம் போல தோன்றும் பஞ்ச பூதங்களும் அவற்றின் விகாரமாகிய அண்ட கோடி சராசரங்களும் காணப்படாது நீங்குமோ, வேதாந்தப் பொருளாகிய அவரே இலங்கையில் இராக்ஷஸர்களோடு யுத்தம் செய்தார் என்பர் தத்துவ ஞானிகள்.

மாலையில் தோன்றும் பாம்பு, தோற்றத்தில் உள்ளதாயினும் உண்மையில் இல்லாததைப் பற்றிப் பொய்ம்மை அரவு எனக் கூறியுள்ளார்.

பெரியவர்கள் இதனை எடுத்து எனக்குக் காண்பித்தார்கள்.

இந்தப் பாடலில் தான், 'பூதம் ஐந்தும் வேறுபாடுற்ற வீக்கம்' 'கை வில் ஏந்தி' என்ற தொடர்கள் இடம் பெற்றுள்ளன.

கம்ப ராமாயணம் ஓரளவு தெரியும் என்று நான் கொண்டிருந்த அகந்தைக்கு நான் பெற்ற ஒரு சரியான அடியாக இதனை எடுத்துக் கொண்டேன்.

இதற்கிடையில் நான் வியப்பில் மூழ்கி விட்டேன்.

கம்ப ராமாயணம் படிப்பதோ, அதைப் பற்றிப் பிரசங்கம் செய்வதோ, பெரியவர்கள் செய்து வரும் பணி அன்று. இந்த அத்வைத சித்தாந்தப் பொன்விழா மாலை 1948 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் வெளியிடப் பெற்று இருக்கிறது. அக்கட்டுரையை அப்பொழுது பெரியவர்கள் படித்திருக்க வேண்டும்.

'காலையின் நறுமலர்' என்று தொடங்கும் பாடலில்வந்திருக்கும்'மாலை' என்றசொல்லையும், 'சமய வாதிகளின் சூலையின் திருக்கு' என்ற தொடரையும், நான் விளக்கிய பொழுது, அக்கட்டுரையும், அதில் இடம்



நீதிபதி மு.மு. இஸ்மாயில்

பெற்றிருக்கும் 'அலங்கலில்தோன்றும்' என்ற தொடரும் அவர்களுக்கு நினைவில் வந்திருக்க வேண்டும்.

பாடலை முழுமையாகத் திரும்பச் சொல்ல நினைவில் வாராமையால் அது எங்கிருக்கிறது என்பதனைக் கண்டு பிடித்து எனக்கு எடுத்துக் காட்டிவிட அவர்கள் காட்டிய வைராக்கியமும், அதில் அவர்கள் வெற்றி பெற்றதும் என்னை வியப்பில் ஆழ்த்தியதில் ஆச்சர்யப்படுவதற்கு எதுவும் இல்லை.

தொண்ணூற்று இரண்டாவது வயதை எட்டும் காலத்தில் இத்தகைய ஞாபக சக்தியும் கூர்ந்த நினைவாற்றலும் சிறிதளவும் கூட குறைவின்றி இருப்பதனைக் காணும் எவர் தாம் தங்களையும் அறியாமல் வியப்பில் மூழ்க மாட்டார்கள்?

அந்தப்பொன் விழா மாலை வெளி வந்ததற்கும் நான் சென்றிருந்த சமயத்திற்கும் இடையே சரியாக 37 ஆண்டுகள் கழிந்துள்ளன. இந்த 37 ஆண்டுகளில் எவ்வளவோ காரியங்களில் பெரியவர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள்; எவ்வளவோ பேசி இருக்கிறார்கள்; எவ்வளவோ பேரோடு உரையாடி இருக்கிறார்கள். இவை அனைத்துக்கும் இடையே ஒரே முறை படித்துப் பார்த்த பல கட்டுரைகளில் ஒன்றில் இடம் பெற்றிருந்த இப்பாடலை, 37 ஆண்டுகட்குப் பின்னரும் அவர்களால் நினைவில் கொண்டு வர முடிந்தது என்பதனை எண்ணிப் பார்க்கும்பொழுது இறைவன் மனிதனுக்குக் கொடுத்திருக்கும் ஆற்றலின் அளவு பற்றி நமக்கு ஆச்சர்யம் உண்டாவதோடன்றி, இடைவிடாமல் பல்வேறு பணிகளில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ள பெரியவர்களால் இதனை நினைவில் கொண்டு வர முடிந்ததும் அற்புதம் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது.

இதனை எனக்குக் காட்டிவிட்ட பிறகு 'மூன்று விருக்கள்' என்ற எனது நூலின் பக்கங்களைப் புரட்டித் தொடர்ந்து பார்ப்பதை அவர்கள் நிறுத்தவில்லை.

தொடக்கத்தில் சில பக்கங்களைப் பார்த்து விட்டு, இறுதியில் உள்ள சில பக்கங்களைப் படிக்கத் தொடங்கிவிட்டார்கள்.

இடையே, நான் போய் ஒன்றரை மணி நேரத்திற்கு மேலாகிவிட்டது.

இரண்டு காரணங்களுக்காக நான் சங்கடப்பட்டுக் கொண்டு இருந்தேன்.

தொண்ணூற்று இரண்டு வயதை எட்டும் பெரியவர்களுக்குத் தொந்தரவு கொடுத்துக் கொண்டு இருக்கிறோமே என்ற எண்ணம் முதற் காரணம்.

நூற்றுக் கணக்கானவர்கள் பெரியவர்களின் தரிசனத்திற்காக ஒதுங்கி தூரத்தில் காத்துக் கொண்டு இருக்கிறார்களே, அவர்கள் என்னைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பது இரண்டாவது காரணம்.

ஆனால் பெரியவர்களின் கவனமோ, முழுமையாக நூலில் இருந்தது. நூலின் இறுதிப் பக்கங்களைப் படித்ததோடல்லாமல், 'துணை நின்றன' என்ற தலைப்பில் உள்ள புத்தகப் பட்டியலையும் படித்துவிட்டார்கள்.

நூலின் இறுதிப் பகுதியாகிய 410 ஆம் பக்கத்தில் உள்ள இரு பத்திகளையும் படித்தார்கள்.

அவை,

'கம்பன் ஒருவனே அந்த மாசுக்கும் மாற்று கண்டு துடைக்க முயல்கிறான்.'

'தவறு செய்வது இயற்கையே, ஆயினும் எப்பொழுது அவன் அத்தவற்றை உணர்ந்து அதற்காக வருந்தி தன் தவற்றினால் பாதிக்கப்பட்டவரிடத்து மன்னிப்புக் கேட்டு பிராயச்சித்தம் செய்கிறானோ, அப்பொழுது மனிதர்களிலேயே உயர்ந்தவன் ஆகிவிடுகிறான் என்ற வகையில் மானிடன் என்ற முறையில் இராமன், 'புருஷோத்தமன்' என்பதனை நிலை நிறுத்தி விடுகிறான் கம்பன்.'

இவ்விரு பத்திகளையும் படித்துவிட்டு முக மலர்ச்சியோடு என்னை நிமிர்ந்து நோக்கி, ''நீங்கள் சீப் ஜஸ்டிஸ். ராமனுக்கு ஜஸ்டிஸ் பண்ணிவிட்டீர்கள்'' என்றுஎன்னிடம்கூறிய தோடல்லாமல் எனக்குப் பொன்னாடை போர்த்தி, வாழ்த்தி விடை கொடுத்தார்கள்.

இந்தக் கட்டத்தில் நான் இருந்த நிலையை வாசகர்கள் உணர்வினால் உணர்ந்து கொள்ளத்தான் வேண்டும்.

## என்ன தலைப்புக் கொடுப்பீர்கள்?

ஒரு பத்திரிகை நிருபர் பணிக்கு நேர்முகத் தேர்வு நடந்தது. தேர்வு நடத்தியவர், ''ஒரு விபத்து. அமைச்சர் ஒருவரின் காரும் லாரி ஒன்றும் மோதிக் கொண்டன'' என்ற செய்தியைக் கூறி அதற்கு எப்படித்தலைப்புக்கொடுப்பீர்கள் என்று வந்திருந்த நால்வரையும் கேட்டார். ஒவ்வொருவரும் கீழ்கண்டவற்றைத் தலைப்புக்களாகக் கூறினர்.

''காரும் லாரியும் மோதல்!''

''அமைச்சரின் கார், விபத்தில் சிக்கியது!''

''லாரியுடன் அமைச்சரின் கார் மோதல்!''

''அமைச்சரின் கார் மீது லாரி மோதியது!''

யாரைத் தேர்ந்தெடுத்தார்கள் தெரியுமா?

நாலாவது நபரைத்தான்!

— சுப்புலட்சுமி ஜெயபாலன்.

பயங்கரவாதிகள்

பஞ்சாப்

வாய் தான் சிரிக்குது! கையைப் பாருங்க!

இந்திய மக்கள்

இன்டர்வெல் முடிஞ்சு எப்போ தான் 'சுபம்' அடிப்பாங்களோ!

ஸஸ்பென்ஸ் திரில் நிறைந்தது

இலங்கைத் தமிழர் பிரச்சினை

பேச்சு வார்த்தை

இடைவேளை

ஹாவ்... ஹாவ்... ஹாவ்...






கல்கி

1985 டிசம்பர் 8
மலர் 44 இதழ் 19
குரோதன கார்த்திகை 23




# கம்ப்யூட்டர் மோகம்; வேலையற்றவர்களின் சோகம்!

நெருங்கி வரும் இருபத்தோராம் நூற்றாண்டுக்கு ஏற்ப நமது செயல்பாடுகள் அமைய வேண்டும் என்றும் எதிலும் விஞ்ஞான நோக்கு வேண்டும் என்றும் நமது பிரதமர் கூறி வருகிறார். இதற்கு அர்த்தம், எதையும் இயந்திர மயமாக்குவதும், கம்ப்யூட்டர்களையும் ரோபோக்களையும் புகுத்துவதும்தான் என்றால் ஆபத்தை விலைக்கு வாங்கியவர்களாவோம். 'கம்ப்யூட்டர்களும் ரோபோக்களும் வேலை வாய்ப்புக்களைக் குறைக்காது; வித்தியாசமான வேலை வாய்ப்புக்களை அளிக்கும்' என்று வாதாடுவோர் உண்டு. இந்த வாதம் சரியானதே என்றாலும் கம்ப்யூட்டர்களும் இதர தானியங்கு அமைப்புக்களும் உருவாக்கக் கூடிய புது ரக வேலை வாய்ப்புக்கள், படிப்பறிவே இல்லாத அல்லது அரைகுறைப் படிப்பே உள்ள நமது மக்களுக்கு ஏற்றவையல்ல. மேல்நாடுகள், அனைவருக்கும் உயர்தரமான கல்வி அளிப்பதில் வெற்றி கண்டு விட்டபடியால் அங்கு கம்ப்யூட்டர்கள், ரோபோக்களால் பிரச்னைகள் எழவில்லை. இங்கு நிச்சயம் எழும்.

இன்று வேலை வாய்ப்பு அலுவலகங்களில் பெயர்ப் பதிவு செய்து கொண்டிருப்பவர்கள் இரண்டரைக் கோடி மக்கள். பதிவு செய்து கொள்ளாத வேலையற்றவர்கள் இது போல் இன்னும் பல மடங்கு இருக்கலாம். வேலையற்றவர்கள் மூளை சும்மா இராது என்பது மட்டுமல்ல, விபரீதமாக இயங்கும்! நமக்கு ஏற்பட்டுள்ள பிரச்னைகள் பலவற்றுக்கு அடிப்படைக் காரணம் வேலையின்மையே. இளைஞர்களிடம் நிலவும் அதிருப்தி, நகரங்களில் ஜன நெரிசல், கல்லூரிகளில் இடம் பிடிக்க முற்றுகையிடும் பெருங் கூட்டம் போன்ற பிரச்னைகள் வேலை வாய்ப்பின்மையின் வெளிப்பாடுகளே.

சில ரகத் தொழிலகங்களில் வேலை வாய்ப்புக்கே இடமில்லை. ஆயிரம் கோடி ரூபாய் முதலீடு செய்து ஓர் உர உற்பத்தி ஆலை அமைத்தால் அது சில நூறு பேர்களுக்குத்தான் வேலை வாய்ப்பு அளிக்கிறது. தவிர, தொழிலதிபர்களும் இயந்திரமயமாக்குவதிலும் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதிலும் உள்ள அனுகூலங்களை உணரத் தொடங்கிவிட்டார்கள். இந்நிலையில் அரசும் அரசுடைமை நிறுவனங்களும் கூட கம்ப்யூட்டர் மோகம் கொண்டனவாக மாறினால் வேலையற்றவர்களின் வயிற்றிலடித்தது போல்தான் ஆகும்.

சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள், விவசாயம், விவசாயம் தொடர்பான தொழில்கள், கைத்தறி, தோல் பதனிடுதல், பாரம்பரியமாக வந்துள்ள கைவினைஞர்களின் தொழில்கள் போன்றவை வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவன. இவர்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கப்பட வேண்டும். பிரதமர் குறிப்பிடுகிற விஞ்ஞான நோக்கு, இவற்றில் ஊடுருவித் தரமுள்ள பொருள்களை உருவாக்கவும் உற்பத்தியான பொருளுக்கு நல்ல விலையைப் பெற்றுத் தரவும் உதவ வேண்டும். கிராமப்புறங்களில் சாலைகள் அமைத்தல், ஏரி, குளங்களை ஆழப்படுத்துதல், கழிப்பறைகள் கட்டுதல் போன்ற பொதுப் பணிகளில் ஏராள வேலை வாய்ப்புக்கள் உண்டு. இதற்குப் பசுமைப் புரட்சி மூலம் இன்று உபரியாக உள்ள தானியத்தை ஒரு பகுதிக் கூலியாக வழங்கி இருவிதப் பயன்களை அடையலாம். நமது கல்வித் திட்டமும் பட்டதாரிகளை மட்டுமின்றி உழைப்பாளிகளையும் உருவாக்குவதாக மாற்றி அமைக்கப்பட வேண்டும்.

வரிகளைக் குறைப்பதன் மூலமும் கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதன் மூலமும் பிரதமர் தொழில்—பொருளாதாரத் துறைகளில் அபிவிருத்தி ஏற்பட வழி வகுத்து வருகிறார். ஆனால் இந்த நடவடிக்கையே வேலையில்லாத் திண்டாட்டத்தையும் ஒழித்துவிடும் என்று நம்பி மோசம் போகக் கூடாது. வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்க விசேஷ கவனம் செலுத்தவில்லையானால் ராஜீவ் தற்போது புரிந்து வரும் பல நல்ல காரியங்களும் விழலுக்கு இறைத்த நீராகிவிடும். மாறாக இந்த விஷயத்தைப் பிரதமர் ஒரு சவாலாகவே ஏற்றுக் கொள்வாரானால் நாட்டில் உள்ள பல கோடி வேலையற்ற இளைஞர்களும் தேசத்துக்குப் பாரமாக இருப்பதற்குப் பதில் நாட்டின் அரும்பெரும் செல்வமாக மாறிவிடுவார்கள்!

---

*தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற*
*தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்*



சேலம் எவர்சில்வரிலும்
தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள்
எல்லா பிரபலமான
பாத்திரக்கடைகளிலும் கிடைக்கும்.

“பெற்று, பேணி வளர்த்த பெண்ணுக்கு கல்யாணமென்றால்
பெற்றோர்களுக்கு மகிழ்ச்சிதானே?

எங்கள் பெண்ணிற்கு ஒரு நல்ல இடத்தில் கல்யாணம்
நிச்சயமாகியிருக்கிறது.

"கல்யாணம் செய்துப் பார்" என்று பெரியவர்கள் சொல்வது
உண்மைதான்!

எவ்வளவு அலைச்சல், எவ்வளவு ஏற்பாடுகள்!

வசதியான கல்யாண மண்டபத்தைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து,
கல்யாணப் பத்திரிகைகள் அனுப்புவது வரை ஆயிரம் வேலைகள்!

ஸ்பெஷலாக நெய்த கூறைப்புடவை, எங்கள் மகளே
டிசைன் செய்த தங்க நகைகள், பாத்திரம் பண்டங்கள் என்று
நீண்ட பட்டியலே போட்டு வாங்கினோம்.

இதையெல்லாம் பொறுக்கியெடுக்க கடை கடையாக ஏறி
அலைந்தாலும், எவர்சில்வர் பாத்திரங்கள் வாங்கும்போது எதை
வாங்கலாம் என்பதில் எங்களுக்கு ஒரு சந்தேகமும் இல்லை.

வேறென்ன, சேலம் எவர்சில்வரில் செய்த பாத்திரங்கள்தான்!

அந்த காலத்தில் கிடைத்த பாத்திரங்களைப்போலவே நல்ல
தரமானவை. கரும்புள்ளிகளோ, கறையோ பிடிக்காது.
வாழ்நாள் முழுவதும் பளபளப்பு குறையாமல்
உழைக்கக்கூடியவை.

வேறென்ன வேண்டும் எங்கள் மகளுக்கு!”

## சேலம் எவர்சில்வர்.
## நம்பிக்கைக்குப் பாத்திரமான பாத்திரங்கள்.

ஸ்டீல் அதாரிட்டி ஆஃப் இந்தியா லிமிடெட்
ஒரு இந்திய அரசு நிறுவனம்
**சேலம் உருக்காலை**
சேலம் 636 013 தமிழ் நாடு

ராஜாஜி வாழ்க்கை வரலாறு—11

ராஜ்மோகன் காந்தி

1

1939ம் ஆண்டு வேனிற்காலத்துக்குள் ஐரோப்பாவில் போர் ஆரம்பித்துவிடும் போல் தோன்றியது. பிரிட்டிஷ் அரசு கவர்ன்மெண்ட் ஆஃப் இந்தியா சட்டத்தை மாற்றி அமைக்க எண்ணியது. அதன் மூலம் இந்திய மத்திய அரசு உலக நிலைமையை அபாயகரமானதாகக் கருதினால் அவசர நிலைப் பிரகடனம் செய்து, மாகாண ஆட்சிகளையும் தானே மேற்கொள்ளலாம். ஸி. ஆர். இதை வன்மையாக எதிர்த்தார். இந்நடவடிக்கையை மாகாணங்களின் ஆட்சியில் அநாவசியமாகக் குறுக்கிட்டு, அந்த அரசுகளின் கௌரவத்தை பாதிக்கக் கூடிய செயல் என்று கருதினார்.

ஆகஸ்டு 22 அன்று இரவு, ஸ்டாலினின் முன்னிலையில் ரிப்பன் ட்ராப்பும் மாலடோவும் கையெழுத்திட ரஷ்ய—ஜெர்மன் ஒப்பந்தம் ஏற்பட்டது. செப்டம்பர் முதல் தேதி ஹிட்லரின் படை போலந்துக்குள் புகுந்தது. இரண்டு நாட்கள் கழித்து பிரிட்டன் யுத்தப் பிரகடனம் செய்தது. அந்த அறிவிப்பு செய்யப்பட்ட சில மணி நேரத்தில் வைஸ்ராய் இந்தியாவும் போரில் பங்கேற்கும் என்று அறிவித்து விட்டார். இதை அவர் சட்டத்துக்குட்பட்ட முறையில்தான் செய்தார் என்றாலும் மத்திய சட்டசபையையோ, இந்தியாவின் கருத்தைப் பிரதிபலித்த பிரபலமான தலைவர்களையோ அவர் கலந்தாலோசிக்கவில்லை.

காங்கிரஸ் இச்செயலைப் பெருத்த அவமானமாகக் கருதியது. அப்படிக் கருதுவதற்கு நியாயமான காரணங்களும் இருந்தன. ஒரு வருடத்துக்கு முன்னால், யுத்தம் நிகழ சாத்தியக் கூறுகள் தோன்றியபோது, காங்கிரஸ் தலைவர்களை கலந்தாலோசித்து யுத்தத்தில் இந்தியா பங்கேற்க அவர்களது சம்மதத்தைப் பெற வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசிடம் திட்டவட்டமாகக் கூறப்பட்டிருந்தது. யுத்தத்தைப் பற்றி காந்தியும் வைஸ்ராயும் சந்தித்துப் பேச வேண்டும் என்று 1938 இல் ஸி. ஆர். கேட்டுக் கொண்டார். ஹிட்லர் போலந்தைத் தாக்குவதற்கு முந்தைய தினம் மீண்டும் அவ்வாறே கேட்டுக் கொண்டார். எர்ஸ்கைன் இக்கோரிக்கையைத் தந்தி மூலம் வைஸ்ராய்க்குத் தெரிவித்தார். இதிலிருந்து காங்கிரஸையோ, காந்தியையோ ஆலோசனை கேட்ட பிறகே இவ்விஷயத்தில் செயல்பட வேண்டும் என்ற கருத்தை பிரிட்டிஷ் அரசு ஆலோசனைக்கு ஏற்று நிராகரித்தது என்பது தெளிவாகிறது. தன் ஆட்சியை ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் எந்தத் தனி மனிதனுக்கோ, அமைப்புக்கோ தன்மானமுள்ள எந்த ஓர் அரசும் இந்தச் சலுகையைத் தராது என்று முடிவு செய்தது பிரிட்டிஷ் அரசு. எனவே இந்தியப் பிரதிநிதி



# உலகப்போர்: காங்கிரஸில் மூன்றுவிதக் கருத்துக்கள்

களைக் கலந்தாலோசிக்கும் எண்ணத்தைக் கைவிட்டது.

காந்தி, தான் யுத்தத்தை ஒரு பிரிட்டிஷ் குடிமகனின் கண்ணோட்டத்தில் காண்பதாக வைஸ்ராயிடம் கூறினார். வெஸ்ட் மினிஸ்டர் ஆபேயில் குண்டு விழக்கூடிய சாத்தியக் கூறுகளைப் பற்றி அவர் லின்லித்கோ விடம் பேசியபோது அவர் கண்கள் கலங்கிவிட்டன. ''காங்கிரஸின் சார்பில் நான் பேசுவதாக எடுத்துக் கொள்ளக்கூடாது. ஆனால் பிரிட்டிஷ் அரசுக்குக் காங்கிரஸ் அஹிம்சா மார்க்கத்தில் பூரண ஆதரவு அளிக்க வேண்டும்; நிபந்தனை ஏதுமற்ற ஆதரவு தர வேண்டும் என்பதே என் சொந்தக் கருத்து'' என்று கூறினார். 'டைம்ஸ்' பத்திரிகை மறக்க முடியாத சொற்கள் பகுதியில் அவருடைய வாக்கை வெளியிட்டது. ''நான் இந்தியாவின் விடுதலையைப் பற்றி மட்டுமே இப்போது சிந்திக்கவில்லை. அது நாளடைவில் கிடைத்துவிடும். ஆனால் இங்கிலாந்தும் ஃப்ரான்ஸும் வீழ்ந்து விடுமானால் நமக்குச் சுதந்திரம் கிடைத்துத்தான் என்ன பயன்?''

யுத்தத்தைப் பற்றி காங்கிரஸ் உறுப்பினர்கள் கொண்டிருந்த அபிப்ராயம் வேறுபட்டது. ஒருபுறம் சுபாஷ் போஸின் தீவிரவாதம். காங்கிரஸ் பிரிட்டிஷ் அரசுக்குக் கெடு வைக்க வேண்டும் என்றார் அவர். இந்திய மக்களையோ பணத்தையோ பிற வளங்களையோ பிரிட்டிஷ் அரசு யுத்தத்தில் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதைத் தடுக்க வேண்டும் என்றார். இதற்கு நேர்மாறாக மிதவாதிகளின் தலைவராக விளங்கினார் ஸி.ஆர். குண்டர்களின் தடலடித் தாக்குதலை எதிர்த்துப் போராடும் பிரிட்டிஷ் அரசுக்குக் காங்கிரஸ் முழு மனதுடன் ஆதரவு தருவது குறித்து அவரால் சிந்திக்க முடிந்தது. இந்த ஆதரவு அஹிம்சை கொள்கைக்குப் புறம்பானதாக இருந்தால் கூடப் பாதகமில்லை என்று அவர் கருதினார். அவரைப் பொருத்தவரையில் அஹிம்சைக் கொள்கை இந்திய சுதந்திரப் போராட்டத்துக்கு இன்றியமையாததாயினும் அதுவே எல்லா யுத்தங்களுக்கும் பொருந்தாது. இதற்குப் பிரதியாக பிரிட்டிஷாரிடம் ஸி. ஆர். கேட்ட அற்ப விஷயம், சில காங்கிரஸ்காரர்களை மத்திய அரசில் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே. இச்செயல் இந்தியாவுக்குப் பூரண சுதந்திரம் அளிப்பது என்ற இலக்கை நோக்கி பிரிட்டன் மனப்பூர்வமாய் முன்னேறுவதற்கான ஓர் அடையாளமாகத் திகழும்.

சுபாஷுக்கும் ஸி. ஆருக்கும் இடைப்பட்ட கருத்துடையவராக இருந்தார் நேரு. காங்கிரஸின் யுத்த கால உப குழுவின் தலைவராக நியமிக்கப்பட்டிருந்தார். ஃபாஸிஸத்தையும் ஹிட்லரையும் எதிர்த்தார் ஜவஹர்லால். ஆனால் அடிமை இந்தியா எப்படி ஹிட்லரை எதிர்த்த நேச நாடுகளின் கூட்டணியில் சேர முடியும் என்பது அவர் வாதம். ''நாங்கள் அடிமைகளாக இருக்கும்வரை யுத்தத்தில் பங்கேற்க மாட்டோம்'' என்று அவர் அறிவித்தார். ''நீங்கள் நடத்தும் யுத்தத்தின் நோக்கங்கள் என்ன? அவை இந்தியாவுக்கு எப்படிப் பொருந்தும்?'' என்று காங்கிரஸ் செயற்குழு பிரிட்டனிடம் கேட்டது. காந்தி மகன் தேவதாஸுக்கு, காந்தியின் நெருங்கிய நண்பரும் தொழிலதிபருமான ஜி.டி. பிர்லா எழுதினார்: ''அப்பட்டமாகச் சொல்வதென்றால் பாபு நிபந்தனையற்ற ஆதரவு தர விரும்பினார். ஜவஹர்லாலோ பேரம் என்ற சொல்லை உபயோகிக்காவிட்டாலும் 'பேரம்' பேசவே விரும்பினார்!

(தொடரும்)

தமிழாக்கம்: **சீதா ரவி**

## டெல்லியின் பாரபட்சம்

பெங்களூர் டி.வி.யில் 'பத்மவியூகா' என்றொரு நிகழ்ச்சி. மாதந்தோறும் கடைசி வாரத்தில் நடைபெறும் இந்நிகழ்ச்சியில் கர்நாடக அமைச்சரவையில் உள்ள ஒவ்வொரு அமைச்சரும் தங்கள் இலாகா சம்பந்தப்பட்ட பொதுமக்களின் சந்தேகங்களுக்கும் குறைகளுக்கும் விளக்கம் அளிப்பார்கள். இடம்பெறும் அமைச்சரை முன்னதாகவே தெரிவிப்பார்கள். பொது மக்கள் தங்கள் சந்தேகங்களைக் கடிதம் மூலம் குறிப்பிட்ட நாட்களுக்குள் எழுதியனுப்புவார்கள்.

இதுவரை முதல்வர் ஹெக்டே உள்பட பல் அமைச்சர்கள் இந்நிகழ்ச்சியில் பங்கேற்றுள்ளனர். இன்னும் 25 அமைச்சர்கள் பங்கு பெற வேண்டும். பொதுமக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றுவிட்ட இந்நிகழ்ச்சி டெல்லி தூர்தர்சன் கண்களை உறுத்திற்று. ஜனதா கட்சிக்கும் அமைச்சரவைக்கும் இது விளம்பரமாக இருக்கிறது என்று காரணம் காட்டி நிறுத்தச் சொன்னது.

'நிறுத்தினால் பொது மக்களிடமும், கர்நாடக அமைச்சரவையிடமும் எதிர்ப்புக் கிளம்பும். கட்சி சார்பற்ற பொதுவான பிரமுகர்களிடம் பேட்டி காண்கிறோம்' என்றுகூறிய பெங்களூர் டி.வி.யின் மாற்று யோசனையை டெல்லி மேலிடம் ஒப்புக் கொண்டது. சமீபத்தில் இந்நிகழ்ச்சியில் அதன்படி இடம் பெற்றவர் பெங்களூர் நகர மேயர். எதிர்பாராதவிதமாக இவரும் ஜனதா மேயரே. மீண்டும் சசமுசா. இனி இந்நிகழ்ச்சி இடம் பெறுமா, பெறாதா? என்ற தவிப்புடன் பொது மக்கள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

— அ. குமார்

— காட்சி — 1 —

(டெலிபோன் மணி அடிக்கிறது. வேலு மணி எடுக்கிறான்.)

வேலுமணி: ஹல்லோ.... வேலுமணி அட்வர்டைசிங்.... ஸ்பீக்கிங்.... ஷாம்பூ கம்பெனியா? ப்ளீஸ், கொஞ்சம் பொறுத்துக்குங்க சார்.... நாளைக்கு ஈவினிங் நிச்சயமா உங்க விளம்பர டிசைனை ரெடி பண்ணிக் குடுத்திடறேன்... கச்சிதமா.... கவர்ச்சியா. ஓ.கே. சார்.... ஷ்யூர்.

(போனை 'டக்'கென வைக்கிறான்)

வேலுமணி: சேச்சே! இந்த பாலையாவை நம்பினதுக்கு ஏதாவது பாழுங்கிணத்தை நம்பியிருக்கலாம். ஷாம்பூ விளம்பரத்துக்காக ஒரு அழகியை ஃபோகஸ் பண்ணிட்டு வரச் சொல்லி கேமிராவைக் குடுத்து அனுப்பி நாலு நாளாச்சு. பயலே இன்னும் காணோம். இதுக்குத்தான் புதுப்புது ஃபோட்டோகிராபர்களையெல்லாம் நம்பி ஒரு கம்பெனியை ஆரம்பிக்கக் கூடாதுங்கறது.

(பாலையா வருகிறான்)

பாலையா: குட் மார்னிங் சார்.

வேலுமணி: (கோபத்துடன்) உன்னோட குட் மார்னிங்கைத் தூக்கிக் குப்பைக் கூடையிலே போடு. முதல்லே ஃபோட்டோ ரெடியா இல்லையா? அதைச்சொல்லய்யா?

பாலையா: ஃபோட்டோ ரெடி சார்.... இந்தாங்க.

(வேலுமணி கவரைப் பிரிக்கிறான்)

வேலுமணி: (அதிர்ச்சியுடன்) என்னய்யா இது?

பாலையா: ஷாம்பூ விளம்பரத்துக்காக நான் எடுத்த ஃபோட்டோ சார்.

வேலுமணி: அநியாயமா இருக்கே. ஃபோட்டோவில் பெண்ணோட தலைமுடி தனித்தனியா பிரிஞ்சு அப்படியே காத்துல அலைஞ்சிட்டு இருக்கணும்னு இல்லே சொல்லி அனுப்பினேன்.

பாலையா: அதே சார்!

வேலுமணி: என்னய்யா அதே. நீ எடுத்திருக்கிற ஃபோட்டோவில் இருக்கிறது ஆம்பிளையா, பொம்பளையா, ஆடா, மாடான்னு கூடத் தெரியாத அக்கிரமமா இருக்கேய்யா. ஏதோ பேய்க் கதைக்காக எடுத்த பிசாசு மாதிரியில்லே இருக்கு.

பாலையா: கொஞ்சம் வெய்ட் பண்ணுங்க சார். அட்டகாசமா ஒரு ஃபோட்டோ எடுத்துத் தந்திடறேன்.

வேலுமணி: உன்னோட அட்டகாசம் இந்தப் படத்திலேயே தெரியுதேய்யா. இதுக்கு மேலேயும் நீ செய்யப் போற அட்டகாசத்தைப் பார்க்கிற தெம்பு எனக்கு இல்லே. முதல்லே காமிராவை இப்படிக் குடு. தன் கையே தனக்கு உதவின்னு இனி நானே களத்தில் இறங்க வேண்டியதுதான்.

— காட்சி — 2 —

(மாலை நேரம். மெரீனாவில் தனியே அமர்ந்து புலம்பிக் கொண்டிருக்கிறான் பிரபாகர்)

# 'ஜீரோ'



பிரபாகர்: என்னடா பொம்பளைங்க! ஆம்பளைங்க மனசைப் புரிஞ்சிக்காத ஜடங்களா இருக்கே. கல்யாணம் ஆயி மூணு மாசங்கூட ஆகலே, அதுக்குள்ளே முப்பத்தி எட்டாவது தடவையா பொறந்த வூட்டுக்குப்போயாச்சு. வெளியே ஆளுக்கு ஆளு 'என்ன மாப்ளே, எப்படி இருக்கு மாரீட் லைஃப்'னு கேக்கறப்போ எல்லாம் செயற்கையா இளிச்சு, இளிச்சு, மூஞ்சியே மாறிப் போயிடும் போல இருக்கு. மைதிலி வரட்டும். இனி ஆறு மாசத்துக்கு 'அவுட் ஆஃப் ஸ்டேஷன்' சமாச்சாரமே எடுக்கப்படாதுன்னு அடிச்சுச் சொல்லிடறேன்.

ஒரு குரல்: ஹாய் பிரபா.

(திடுக்கிட்டுத் திரும்புகிறான் பிரபாகர்)

பிரபா. யார்....ஹ....ஹலோ....சந்தோஷா? சௌக்கியமா?

சந்தோ: சந்தோஷமா சௌக்கியமா இருக்கேன்.

பிரபா: கானடாவுக்குப் போயிட்டதா இல்லே கேள்விப்பட்டேன்.

சந்: வகேஷனுக்கு தாய்நாடு வந்திருக்கேன். பை த பை மீட் மிஸஸ் ஜெனட் சந்தோஷ். கானடாவில் என் இதயத்தைக் கவர்ந்து, அப்புறம் என்னையும் கவர்ந்து கொண்ட என் மகாராணி.

ஜெனட்: ஹாய்.... எப்டி கீங்?

சந்: முழிக்காதே. எப்படி இருக்கீங்கன்னு கேக்கறா. இலக்கண சுத்தமான தமிழில் பேசிப் பழகணும்னு ஆவேசமா இருக்கா.

# கலாட்டா செய்த ஜெனட்



நானும் முடிஞ்ச வரைக்கும் சொல்லித் தர்றேன்.

பிரபா: உனக்கே இலக்கணம்னு இழுபறி. வழிப்பறி ஆச்சே. இவங்களுக்கு வேற எப்படித்தான் சொல்லித் தர்றியோ?

சந்: (இடைமறித்து) அதையெல்லாம் இப்போ எதுக்கு ரிலீஸ் பண்ணி மானத்தை வாங்கறே? எப்படியோ, இப்போ, உன்னைப் பார்த்ததிலே எனக்கு ஒரு ப்ராப்ளம் சால்வ்டு.

பிரபா: (திகைத்து) ப்ராப்ளமா?

சந்: பெரிசா ஒண்ணுமில்லே. நான் இப்போ கடல்லே ஆசை தீரக் குளிக்கப் போறேன். இவளுக்குக் கடல் குளியல்னு அலர்ஜி. நான் குளிச்சிட்டு வர்ற வரைக்கும் நீ இவளோட கொஞ்சம் தமிழில் விளாசிட்டு இருக்கிறே.

(உடைகளைக் கழற்றி வீசிவிட்டு, ஜட்டியுடன் கடலை நோக்கி ஓடுகிறான் சந்தோஷ்)

பிரபா: (தனக்குள்) இதென்னடா வம்பு? இப்போ இவளோடு நின்னுட்டுப் பேசறதா, நடந்துட்டுப் பேசறதா...

ஜெனட்: அமர்வமா?

(ஜெனட் உட்காருகிறாள். கொஞ்சம் குழம்பி விட்டுத் தள்ளி உட்காருகிறான் பிராபகர்)

பிரபா: உங்களுக்குத் தமிழ் நல்லாப் பேச வரும் போலிருக்கே?

ஜெனட்: தூய்ய தமில்லில் பீச ஏனக் பெடிக்கும்.

பிரபா: (நிலைகுலைந்து) அது, சரி.

ஜெனட்: இந்த்..த் சமத்..திரம் நா..லா இருக்கு.

பிரபா: (திகைத்து) சமுத்திரம் நாலா இருக்கா. ஒண்ணுத்தானே இருக்கு. ஓ... சமுத்திரம் நல்லா இருக்குன்னு சொல்றீங்களா? சந்தோஷம்.

ஜெனட்: பட் ஏனக் ஜல்...தோஷம்.

(ஜெனட் அட்டகாசமாகச் சிரிக்கிறாள். விதியே என்று கூடச் சேர்ந்து சிரிக்கிறான் பிரபாகர்.)

ஜெனட்: உங்கல்... வாலே... எங்க்கே?

பிரபா: (அதிர்ந்து) என்னது?

ஜெனட்: ஐ மீன்.... யுவர் ப்ரஃபசன்.

பிரபா: ஓ வேலையா.... மை காட்.

ஜெனட்: புர்யலேங்...

பிரபா: (இடைமறித்து) ஆபீஸர் இன எ பாங்க் (மெதுவாக) சே, என்ன காத்து இது? இவளோட மயிரையெல்லாம் என் மூஞ்சியிலே கொண்டாந்து விளாசிக்கிட்டு....

ஜெனட்: என்..ன சொல்றைங்..

பிரபா: நத்திங்... அது வந்து.... யுவர் ஹேர் டான்சஸ் இன் த ஏர்.

ஜெனட்: ஓவ்வ்வ்... வாட் எ ஜோக் (விழுந்து விழுந்து சிரிக்கிறாள்)

பிரபா: (எரிச்சலோடு) முன்னே பின்னே ஜோக்கே கேட்டிருக்க மாட்டா போலிருக்கு.

(சந்தோஷ் குளித்துவிட்டு, நனைந்த உடம்புடன் வருகிறான்)

சந்: (டவலால் தலையைத் துவட்டியபடி) பிரபா, எப்படி இருக்கு என் மகாராணியின் தமிழ்.

பிரபா: கொடுத்து வச்சவன் நீ.

சந்: எப்படிச் சொல்றே?

பிரபா: (சந்தோஷின் காதில் மட்டும் விழும் படி) உன் ஒய்ஃப் உன்னைத் தமிழில் எப்படித் திட்டினாலும் உனக்குக் கோபமே வராது. சிரிப்புத்தான் வரும்.

(சந்தோஷ் வாய்விட்டுச் சிரிக்கிறான்).

— காட்சி — 3 —

(பீரோவிலிருந்து ஒருமாதிரியான டிசைன் புடவையைஎடுத்துஉடுத்திப்பார்க்கிறான் பிரபாகர்.)

பிரபா: சிங்கப்பூர் லுங்கி மாதிரி இருக்கு. இதையும் ஒரு புடவைன்னு எடுத்திருக்கா, எப்படியோ, இதை உடுத்திக்கொண்டால் அவள் பக்கத்திலேயே இருக்கிற மாதிரி ஃபீலிங்.

(திடீரென வந்து நிற்கிறாள் மைதிலி)

மைதிலி: நான் சந்தேகப்பட்டது சரியாப் போச்சு. வெறும் புடவைக்கு இப்படி உணர்ச்சிவசப்படுகிறவர், அதை ஒருத்தி கட்டிட்டு நின்னுட்டா கேக்கணுமா?

பிரபா: (வியப்பும் மகிழ்ச்சியும் போட்டியிட) மைதிலியா? அட ஒரு லெட்டர் கூடப் போடாமல் வந்து நிக்கறியே!

மைதிலி: சகிக்கலே. இது உங்களுக்கே நல்லா இருக்கா?

பிரபா: எது? உன் புடவையை எடுத்துக் கட்டிட்டிருக்கேனே அதைச் சொல்றியா? நீதான் அடிக்கடி என்னைத் தவிக்க விட்டுட்டு டூர் போயிடறியே. உன் புடவையை, யாவது எடுத்துக் கட்டிக்கலாமேன்னு தான். உண்மையாச் சொல்றேன், உன் புடவையைக் கட்டிட்டா டான்ஸ் ஆடணும் மாதிரி உற்சாகம் வந்துறுது.

மைதிலி: உடான்ஸ். நெஜமா சொல்லுங்க. எவளோட ஞாபகத்தை மனசில வச்சிட்டு இந்தப் புடவையை எடுத்துக் கட்டிக்கிட்டீங்க?

பிரபா: எவளோட ஞாபகத்தை....? ஏய் என்ன சொல்றே நீ?

மைதிலி: முதல் இரவில் கன்னுபின்னுன்னு வர்ணிச்சப்பவே ஏது இவ்வளவு ஹை லெவல் எக்ஸ்பீரியன்சோடு இருக்கார்னு சந்தேகப்பட்டேன். இப்பத்தான் புரியுது. ஹூம்..(விம்முகிறாள்)

பிரபா: மைதிலி, என்ன உளறல். உனக்கு ஏதாச்சும் பைத்தியம் பிடிச்சிடுச்சா?

மைதிலி: எனக்கொண்ணும் பைத்தியம் பிடிக்கலே. உங்களுக்குத்தான் முத்திப் போயிருக்கு. அதுவும் பெண் பைத்தியம். அதிலேயும் வெள்ளைப் பைத்தியம்.

(ஒரு வாரப் பத்திரிகையை எடுத்து வீசுகிறாள். அதில் இருக்கும் ஷாம்பூ விளம்பரப் படத்தைப் பார்த்து பிரபாகருக்குத் தலை சுற்றுகிறது)

பிரபா: ஓ... காட்... ஜெனட் சந்தோஷ்... மெரீனுபீச்சில் அவளோட ஹேர் காற்றில் ஆட.... பக்கத்தில் நான்.... எந்தப் பாவி இந்தப் படத்தை எடுத்தது....?

மைதிலி: பல நாள் திருடன் ஒரு நாள் ஆப்படுவான்னு சொல்லக் கூட இப்ப எனக்குத்திராணி இல்லாமப்போயிடுச்சு. நம்ம கல்யாணத்துக்கு முன்னடியே நீங்க அகப்பட்டிருக்கக் கூடாதா? என்னோட வாழ்க்கையே நிம்மதியில்லாமல் போயிடுச்சே.

பிரபா: (கோபத்துடன்) மைதிலி. அர்த்தங் கெட்டத்தனமா கத்தாதே. அவள் என் ஃப்ரண்டோட பெண்டாட்டி.

மைதிலி: (வாயில் அடித்துக் கொண்டு) அய்யய்யோ... ஃப்ரண்டோட பெண்டாட்டிகிட்டேயே இப்படியா? உடம்பெல்லாம் கூசுதே. வீட்ல யாரும் பார்த்திடக் கூடாதேன்னு இதைத் தூக்கிட்டு இங்கே ஓடி வந்தா, என் தலையிலே இப்படிப் போட்டு உடைக்கிறீங்களே.

பிரபா: சும்மா எதுக்கு அலர்றே? அவளுக்கும் எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லே.

மைதிலி: (அரற்றிக் கொண்டே) ஜெனட்னு சொன்னது நீங்கதானே. ஃப்ரண்டோட பெண்டாட்டின்னு சொன்னதும் நீங்க தானே. இப்போ சம்பந்தமேயில்லேன்னு சொல்றதும் நீங்கதானே.

(ஒப்பாரி வைக்கிறாள்.)

பிரபா: இப்படியே பாடிட்டு இரு. இப்போ உனக்கு என்ன சொன்னாலும் செவிட்டுக் காதிலே ஊதின சைரன்தான். முதல்லே அந்தசந்தோஷைக்கொண்டாந்துஉனக்கு முன்னடி நிறுத்தினுத்தான் நம்புவே.

(கோபத்துடன் வெளியேறியவன், திடுமென மீண்டும் உள்ளே ஓடி வருகிறான்)

பிரபா: சனியன், சனியன். இவளோட பேசிட்டுப் போனால் இருக்கிற கொஞ்ச நஞ்ச மானம் மரியாதையும் பிஞ்சு போயிடும். கட்டின புடவையோடு வெளியே போக இருந்தேன்.

(புடவையைக் கழற்றி வீசிவிட்டு, பேண்ட், சட்டையை மாட்டிக் கொண்டு வெளியேறுகிறான்)

— காட்சி — 4 —

(ஆபீஸ் அறையில் படபடவென்று ஒரு டைரியைப் புரட்டிப் பார்த்துவிட்டு, அவசரமாக டயல்செய்கிறான் பிரபாகர்)

பிரபா: ஹலோ, ஹோட்டல் சவேரா தானே?

மறுமுனை: எஸ் ஸார்.

பிரபா: ஹலோ, ஏழாம் நெம்பர் ரூமில் சந்தோஷ்னு ஒருத்தர்.

மறுமுனை: இன்னைக்குக் காலையிலேதான் அவர் ரூமைக் காலிபண்ணிட்டுப்போனார். சார்.

பிரபா: மைகாட்

(அலுப்புடன் ரிசீவரை வைக்கிறான்)

பிரபா: என்ன செய்யறது இப்போ. இருந்த ஒரே சாட்சியும் கையைவிட்டுப் போயிடுச்சே.

(தலையில் கையை வைத்துக் கொண்டு மேஜையின் மேல் கிடக்கும் ஷாம்பூ விளம்பரப் படத்தையே வெறித்துப்

# புத்தாடை போல் வெண்மை!

**சலவை தோறும் பொலிவு...சலவைக்கு சலவை...பவர் பேக்டு ஸர்ஃப் புத்தாடைபோல் வெண்மை பொலிய வெளுக்கிறது!**

வெளுக்கும் ஒவ்வொரு சட்டைக்கும், ஒவ்வோர் ஆடைக்கும் வெண்மை மிடுக்கு, புதுமைக் கருக்கு-அளிக்குது பவர் பேக்டு ஸர்ஃப். அன்றன்றே வாங்கி அணிவது போல் என்றென்றும்...கோடித் துணிபோல் கோலப் புதுமை.

இதுவரை இல்லாத ஏற்றமான சக்தி செறிந்து வருகுது பவர் பேக்டு ஸர்ஃப்... பேராற்றல் மிகுந்தது. பேணிக் காப்பதில் உயர்ந்தது. ஆழ ஊடுருவித் துப்புரவாக்கும் சக்திபடைத்தது! அடைக்திராத அமோகமான நுரைவளம் மிகுந்தது.

விடாத அழுக்கையும் விரட்டியடிக்கும், வெண்மையினை வாழ்விக்கும், காலமெல்லாம் துணிப் புதுமை காக்கும்.

வெண்ணிறமோ, வர்ணமோ...விசேஷத் துணிகள், அன்றாடத் துணிகள் எல்லாமே ஒளிமிளிரும் ஒப்பற்ற வெள்ளைவெளேர்... ஸர்ஃப் சலவையிலே...நித்தமும் நிலைபெறுமே புத்தாடைக் களையுடனே.

சலவைப் பவுடர்கள் பலநூறு இருக்கலாம், ஆனால் உங்கள் குடும்பத் துணிகளுக்கு நம்பிக்கையானது ஸர்ஃப் ஒன்றுதான்... ஸர்ஃப் அன்றி வேறில்லை.




**ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர், சகல துணிகளுக்கும் புதுமை ஜோர்!**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS SU 323 2517 TM

பார்க்கிறான். திடீரென்று உற்சாகத்துடன் டயல் செய்கிறான்)

பிரபா: ஹலோ, ஷாம்பூ கம்பெனியா?

மறுமுனை: ஆமாங்க, என்ன வேணும்?

பிரபா: ஒண்ணுமில்லே, இந்த வார இஷ்யூவில் வந்திருக்கும் உங்க ஷாம்பூ விளம்பரம் கன ஜோரா இருக்கு. ப்ளீஸ், அந்த ஃபோட்டோவை எடுத்தது யாருன்னு சொல்ல முடியுமா?

மறுமுனை: ஓ.... அந்த போட்டோவா? அது வந்து.... வேலுமணி அட்வர்டைசிங்... போன் நெம்பர் சொல்லணுமா?

பிரபா: ப்ளீஸ்

(போன் நெம்பரை அவசரமாகக் குறித்துக் கொள்கிறான். பிறகு அந்த நெம்பரை டயலில் சுழற்றிவிட்டு படபடப்புடன் காத்திருக்கிறான்)

மறுமுனை: ஹலோ.... வேலுமணி அட்வர்டைசிங்....

பிரபா: (கடுகடுப்புடன்) வாடா உங்கப்பம் மவனே.

வேலு: வாட்?

பிரபா: அப்படியே வெட்டிப்புடுவேன் உன்னைப் போட்டு. எத்தனை பேர் குடியைக் கெடுத்திருக்கே இதுவரைக்கும்?

வேலு: ராங் நெம்பர்....

பிரபா: வெச்சே போனை.... அரெஸ்ட் வாரண்ட்டோடு நேரா வந்திருவேன். அட்வர்டைசிங் கம்பெனி நடத்துறீங்களா, இல்லே அலும்புடைசிங் கம்பெனி நடத்துறீங்களா?

(அதற்குள் பிரபாகரின் மேஜை மீதிருக்கும் இன்னொரு போன் அலறுகிறது)

பிரபா: லைன்லேயே இரு. டிஸ்கனெக்ட் செஞ்சே தொலைச்சிடுவேன்.

(அலறும் போனை எடுக்கிறான்)

பிரபா: ஹலோ, பிரபாகர் ஹியர்.

மறுமுனை: ஹல்லோ, பிரபா, நான் சந்தோஷ் பேசறேன்.

பிரபா: (சுத்தலாக) சந்தோஷ்.... சந்தோஷ்.

சந்தோஷ்: கூல் டெளன்.... கூல் டெளன்... என்ன ஆச்சு? ஏன் இப்படி அலர்றே?

பிரபா: உன்னைத்தான் பேயா அலைஞ்சு தேடிட்டிருக்கேன். இந்த வாரம் 'முடிச்சு' பத்திரிகையில் ஒரு ஷாம்பூ விளம்பரம் வந்திருக்கு....

சந்: பார்த்தேனே. அதுக்காகத்தான் உனக்கு போன் செஞ்சேன். அந்த போட்டோ மாஸ்ட்டர் பீஸ் மாதிரி இல்லே?

பிரபா: மாஸ்ட்டர் பீஸா? என் லைஃபையே பீஸ் பீஸாப் பண்ணிடும் போல இருக்கு அது.

சந்: என்ன பெனாத்தறே?

பிரபா: நான் பெனாத்தலே. அந்த போட்டோவை பார்த்ததிலிருந்து என் பெண்டாட்டிதான் பெனாத்த ஆரம்பிச்சிட்டா.

(மறுமுனையில் இடி இடியெனச் சிரிக்கிறான் சந்தோஷ்)

பிரபா: சந்தோஷ்.... உனக்கு ஜோக்கா இருக்கா? ரியலி இப்போ என் பொஸிஷன் ரொம்ப கிரிடிகல். உடனே எனக்கு உன்னோட ஹெல்ப் தேவை. நீயும், உன் ஒய்ஃபும் என் வீட்டுக்குக் கண்டிப்பா வந்தே ஆகணும்.

சந்: நானும், ஜெனட்டும் உன் வீட்டுக்கு வரணும். அவ்வளவுதானே?

பிரபா: வளவே

சந்: வந்தோம்.

பிரபா: என்ன சொல்றே?

சந்: இப்போ உன் வீட்டிலிருந்துதான் பேசறோம். போதுமா? சந்தேகமா இருந்தா, இதோ உன்னோட ஒய்ஃபே பேசறாங்க.

மைதிலி: என்னங்க, நான்தான் மைதிலி பேசறேன். மிஸஸ் சந்தோஷ் எல்லாம் சொன்னாங்க. என்னை மன்னிச்சிடுங்க.

(பிரபாகர் பதில் சொல்லாமல் சந்தோஷப் பிரமையில் உட்கார்ந்திருக்கிறான்.)

மைதிலி: கோபமா? சாயங்காலம் என்ன டிஃபன் செய்யட்டும்?

பிரபா: (விழித்துக் கொண்டவன் போல) என்ன டிஃபனா? விருந்தே பண்ணு. இதோ வந்திடறேன்.

(ரிசீவரை வைத்துவிட்டு அமர்க்களமாய் விசில் அடிக்கிறான். இடக்கையிலிருக்கும் ரிசீவர் ஹலோ, ஹலோ என்று அலறுகிறது)

பிரபா: (ரிசீவரை காதில் வைத்து) யார்?

வேலு: யாரா? வேலுமணி அட்வர்டைசிங் சார். ரொம்ப நேரமா லைன்லேயே நின்னு காதெல்லாம் வலிக்குது சார்.

பிரபா: ஓ.... (ஒருகணம் யோசித்துவிட்டு) தேங்க்யூ வெரி மச்.

(மறுமுனையில் வேலுமணி ரிசீவரைக் குழப்பத்துடன் திரும்பத் திரும்ப பார்க்க, புன்னகையுடன் போனை வைத்துவிடுகிறான் பிரபாகர்.)

---

மன்னர்: என்ன இது? பட்டத்து யானை ஒவ்வொருவரிடமும் துதிக்கையை நீட்டிக் காசு கேட்கிறது?

மந்திரி: மன்னிக்கவும் மன்னா! பட்டத்து யானைக்கு உடல் நலமில்லாததால், வித்தை காட்டும் யானை ஒன்றை இன்று ஏற்பாடு பண்ணினேன்...!

—வெ. இராமலிங்கம்.





# சித்தரஞ்சனி

## 19. உயர்ந்த புகை மண்டலம்! விளைந்த திருமணம்!

விற்களில் வாளிகளைப் பூட்டி ஐம்பது வீரர்களால் திருமணக் கூட்டத்தை அச்சுறுத்தி நிறுத்திவிட்டு, அடுத்து செய்ய வேண்டிய காரியங்களுக்கு உத்தரவையும் பிறப்பித்துவிட்டு மிகுந்த அலட்சியமாகத் திரும்பிச் சென்றுவிட்ட நாகபாணனைப் பார்த்துக் கொண்டே நாபிலேசுவரர் கோவில் படிகளில் சித்தரஞ்சனியின் கையைப் பிடித்த வண்ணம் சிலையென நின்றுவிட்ட கௌதமிபுத்ரன், க்ஷத்ரபன் படிகளில் இறங்கி வந்து சித்தரஞ்சனியின் கையைத் தனது கையிலிருந்து விடுவிக்கக் கையை வைத்ததும் ''க்ஷத்ரபா! கையை எடு!'' என்று உக்கிரமான குரலில் கூறினான். அத்துடன் அங்கிருந்த திருமணக்கூட்டத்தை நோக்கி, ''மலைவாசிகளே! எனக்காக இந்த வீரர் கூட்டத்துக்கு நீங்கள் பலியாக வேண்டாம். சமாதானமாகச் சென்றுவிடுங்கள்'' என்று அவர்களுக்கும் உத்தரவிட கூட்டமும் மெள்ளக் கலையத் தொடங்கியது.

சாதவாகனன் இப்படி தன்னைத் தானே நிராதரவாக்கிக் கொண்டதைக் கண்ட க்ஷத்ரபன் எப்படியும் சித்தரஞ்சனியைத் தனது வீரர்களைக் கொண்டு சிறை செய்து அழைத்துப் போய்விடலாம் என்ற தைரியத்தில் அவள் கையை விடுதலை செய்து, ''சித்தரஞ்சனி! இனி நீ யார் வலுக்கட்டாயமுமில்லாமல் வந்துவிடலாம். பழைய மாப்பிள்ளையையே உனக்கு மகாக்ஷத்ரபர் மணமுடிப்பார்'' என்று சற்று கர்வத்துடன் கூறினான்.

அத்தனை விபரீத நிலையிலும் ஆபத்திலும் கௌதமிபுத்ரன் புன்முறுவல் கொண்டு, ''க்ஷத்ரபரே, உமது மகளுக்கு இரண்டு மாப்பிள்ளைகள் உண்டா?'' என்று வினவினான்.

''இரண்டு மாப்பிள்ளைகளா! ஒருக்காலும் கிடையாது'' என்று திட்டமாகச் சொன்னான் க்ஷத்ரபன்.

''பழைய மாப்பிள்ளையென்று யாரையோ சொன்னீர்களே?'' என்றான் கௌதமிபுத்ரன்.

''சொன்னேன்.''

''அப்படியானால் பழைய மாப்பிள்ளை புதுமாப்பிள்ளை என்று இருவர் ஆகாதா?''

இதைக்கேட்டதும்கோட்டையிலிருந்து வந்தவீரர்கள் கொல்லென்று சிரிக்கவே, அவர்களை முகத்தில் உஷ்ணம் விரிய நோக்கிய க்ஷத்ரபன், ''இங்கு சிரிப்புக்கு இடமில்லை. செயலுக்குச் சித்தப்படுங்கள்'' என்றான்.

செயலுக்கு அவர்கள் சித்தமானார்களோ இல்லையோ கௌதமிபுத்ரனும், சேனாதிபதியும் ஒரே சமயத்தில் செயல்பட்டார்கள். க்ஷத்ரபனுடன் பேச்சுக் கொடுத்துக் கொண்டே சேனாதிபதியுடன் நயன பாஷையில் இறங்கிய சாதவாகன வாலிபன், சித்தரஞ்சனியின் இடையில் கையைச் செலுத்தி அவளை அரைத் தூக்காகத் தூக்கிக் கொண்டு கோவிலின் பிரகாரத் திண்ணைக்குத் தாவிவிட்டான். சாதவாகனன் செயல்படத் துவங்கியதும் சேனாதிபதி வஜ்ரபாகு பிரகாரத் திண்ணைத் தூணில் சாய்ந்து கொண்டிருந்த காஷ்டானனை மின்னல் வேகத்தில் கையைப் பிடித்துத் தூக்கிப் பாதுகாப்பாகத் தனக்கு முன்பாகப் பிடித்துக் கொண்டான்.

அப்பொழுது பேசினான் மிக உக்கிரமான குரலில் சாதவாகனன், ''யார் அம்பைத் தொடுத்தாலோ, குறுவாளை எறிந்தாலோ முதலில் பழைய மாப்பிள்ளை பலியாவான்'' என்று. அவனது சொற்களின் காரணத்தைப் புரிந்து கொண்ட சேனாதிபதி மெள்ள நகர்ந்து சாதவாகனனுக்கும் சித்தரஞ்சனிக்கும் முன்பாக நின்று வீரர்கள் வாளிகளுக்குப் பலியாக காஷ்டானனை அடிக்கடி அசைத்துக் காட்டினான். மெள்ள காஷ்டானன் காதில் குனிந்து ''உனக்கு ஆபத்து ஏதுமில்லை, பேசாமல் இரு'' என்று மந்திரமும் ஓதினான்.

அந்த நிலையில் காஷ்டானன் தனது மாப்பிள்ளைப் பதவியை மறந்தான், நாகபாணனை மறந்தான், உயிர் ஒன்றே பிரதானமென்று அந்த நினைவிலேயே இருந்ததால் பலிக்குச் செல்லும் கிடாவைப் போல்

சாண்டில்யன்

தலையை ஒருமுறை ஆட்டிச் செயலற்று நின்றான். அப்பொழுதும் கோட்டை வீரர்கள் வாளிகளை எய்யச் சித்தமாக நிற்கவே, ''அம்பு வீசாதீர்கள். மகாக்ஷத்ரபர் என்னைக் கொல்ல உத்தரவிடவில்லை'' என்று கூவினான்.

திருமணத் தருணத்தில் முதல் திருப்பத்தால் ஏற்பட்ட மகிழ்ச்சியையும் துணிவையும் முற்றும் எதிர்பாராத இரண்டாவது திருப்பத்தால் இழந்த க்ஷத்ரபன். ''சாதவாகனா! இந்தச் சாகசத்தால் நீ தப்பிவிடமுடியுமென்று நினைக்காதே. சித்தரஞ்சனியையும் காஷ்டானனையும் அனுப்பிவிடு. உன்னை நான் சிறை செய்யவில்லை'' என்று சமரசம்பேச ஆரம்பித்தான்.

''க்ஷத்ரபரே! என்னையும் சேனாதிபதியையும் சிறை செய்து மரக்கலத்துக்குக் கொண்டு போகாமல் நீர் அஞ்சன்வேல் திரும்பினால் உம்மை மகாக்ஷத்ரபர் என்ன செய்வாரென்பது உமக்கே தெரியும். ஆகவே இந்தத் திருப்பத்தை அவரிடம் சொல்லிப் பரிகாரம் கேளும்'' என்று சொல்லிக் கொண்டே பின்னால் நகர்ந்து கோவில் வாயிற்படியைத் தாண்டிவிட்டான். பழைய மாப்பிள்ளையை இழுத்துக் கொண்டு சேனாதிபதியும் உட்புறம் சென்றதும் கோவிற் கதவு பெரும் சத்தத்துடன் வேகமாக மூடப்பட்டது.

இப்படி தந்திரமாகச் சாதவாகனன் அந்தச் சமயத்துக்குத் தப்பிவிட்டாலும் கோவிலைச் சுற்றி முற்றுகையிட்டு அவனை வெளி வரச் செய்துவிட முடியுமென்ற எண்ணத்தால் வீரர்களைக் கோவிலைச் சூழ்ந்து கொள்ளச் சொல்லி உத்தரவிட்டான் க்ஷத்ரபன். பிறகு தான் மட்டும் கோவில் படிகளில் ஏறி கதவை பலமாகத் தட்டி, ''சாதவாகனா! கதவைத் திறந்துவிடு. இல்லையேல் கதவை உடைத்து உட்புகுந்து விடுவேன்'' என்று இரைந்தான்.

கோவில் கதவில் பூட்டின் பெரிய துவாரத்தின் மூலம் உள்ளிருந்து பதில் வந்தது. ''முட்டாள்! கோவில் கதவை இடிப்பது தெய்வத்துக்குச் செய்யும் அபசாரமாகும். அந்த அபசாரத்துக்கு இந்த மலைவாசிகளும் சுற்றுப்புறமுள்ள கிராமவாசிகளும் உன்னையும் உனது வீரர்களையும் ஒழித்துக் கட்டிவிடுவார்கள். ஏற்கனவே பொய்ப் பிசாசைக் காட்டியதற்காக கிராமங்களில் கொந்தளிப்பு இருக்கிறது. பேசாமல் போய் விடு. திருமண நேரம் நெருங்கிவிட்டது'' என்று கௌதமிபுத்ரன் குரல் துவாரத்தின் மூலம் ஒலித்தது.

திகைத்து நின்றான் க்ஷத்ரபன். கௌதமிபுத்ரன் சொற்களில் உண்மை இருந்ததைப் புரிந்து கொண்டான். சற்று திரும்பிக் காட்டைப் பார்த்தான். சண்டி ஹோமாக்கினியின் புகை ஆகாயமளவில் எழுந்து மலை உச்சியை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அதைக் கண்ட க்ஷத்ரபன், கௌதமிபுத்ரன் இட்டமிட்டுத் தங்களுக்கு எதிரே மலை மக்களையும் அடுத்த கிராமவாசிகளையும் கிளப்பி விட்டதை நினைத்து, ''என்ன இருந்தாலும் எதிரி மகா சூக்ஷ்ம புத்தியை உடையவன்'' என்று அவனைப் பற்றி வியந்தான். கோவில் கதவை இடித்தால் பெரும் விபரீதமும் மக்கள் விரோதமும் ஏற்படும் என்ற நினைப்பால் கதவுக்கருகிலேயே நின்றுவிட்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம் உள்ளிருந்து பெருத்த குரலில் யாரோ மந்திரங்களை உச்சரித்தார்கள். உள்ளிருந்து புகையும் வெளியே வந்தது சிறிது. என்ன நடக்கிறது உள்ளே என்பதை அறிய கதவின் பூட்டு துவாரத்தின் மூலம் உள்ளே நோக்கினான் க்ஷத்ரபன்.

உள்ளே முன் மண்டபத்தில் தாபிலேசுவரர் சந்நிதிக்கெதிரில் சிறிது தீ மூட்டப்பட்டிருந்தது. சேனாதிபதி பக்கத்தில் உட்கார்ந்து அக்னியில் சுள்ளிகளை இட்டு நெய்யையும் சிறிது ஊற்றி மந்திரங்களைப் பெரிதாகச் சொல்லிக் கொண்டிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் காஷ்டானன் உட்கார்ந்து தனது தலையில் எழுந்த முண்டை தடவிக் கொண்டிருந்தான். அவன் கழுத்திலும் ஒரு மாலை போடப்பட்டிருந்ததால் அவன் மாப்பிள்ளைத் தோழனுக்கப்பட்டதை க்ஷத்ரபன் புரிந்து கொண்டான்.

சேனாதிபதி உபாத்யாயராகி மந்திரங்களைச் சொல்ல அக்னியை வலம் வந்த கௌதமிபுத்ரன் சித்தரஞ்சனியின் கையில் கங்கணம் கட்டி அவளுக்கு மாலையும் சூட்டினான். அக்னி சாட்சியாகவும் தாபிலேசுவரர் சாட்சியாகவும் கோவிலுக்குள்ளே கிரமப்படி விவாஹம் நடப்பதைக் கண்ட க்ஷத்ரபன் அதற்கு மேலும் பொறுக்காமல் நடப்பது நடக்கட்டுமென்று கதவைபலமாக உடைக்கத்தீர்மானித்தான். தாபிலேசுவரர் கோ[illegible] மகா



க்ஷத்ரபர் கோபம் கொடியது என்ற காரணத்தால் எந்த பாதகத்துக்கும் துணிந்த க்ஷத்ரபன் ''இடித்துத் தள்ளுங்கள் கதவை. பிறகு தாபிலேகவருக்கு இதைவிட நல்ல கதவைச் செய்து சமர்ப்பித்துப் பெரும் செலவில் கும்பாபிஷேகமும் செய்து வைப்போம்'' என்று வெறி பிடித்தவன் போல் கூவினான் வீரர்களை நோக்கி.





# அருள்வாக்கு

சாஸ்திரமென்றால் ஒரே கட்டுப்பாடாயிருக்குமே என்று பயப்படக்கூடாது. 'ஸ்வதந்திர யுகம்' என்று சொல்லிக் கொண்டு ஸ்வயேச்சைப்படி கட்டையறுத்துக்கொண்டு போய் என்ன கண்டோம்? ஏதோ அவ்வப்போது, ஒரு பெரிய மரக்கிளை காற்றில் ஆடுகிறபோது, அதன் விஸ்தாரமான நிழலில் துளிப் போல, இரண்டு இலை இடுக்கால் ஸூர்ய வெளிச்சம் விழுகிற மாதிரி, எப்போது பார்த்தாலும் இனம் தெரியாமல் பாரமாக மனஸை அழுத்திக் கொண்டிருக்கிற துக்க இருட்டில் இந்த ஸ்வாதந்திரியப் போக்கினால், இரண்டு கீற்று ஸந்தோஷ ரச்மி, துளி நேரம் ஆட்டம் போட்டுவிட்டுப் போவதைத் தவிர சாச்வத ஸௌக்யத்துக்கு, நிரந்தர நிம்மதிக்கு இந்த ஸ்வதந்திரத்தாலோ ஸயன்ஸ் டிஸ்கவரிகளாலோ, பொருளாதார அபிவிருத்தியாலோ நம்மால் என்ன ஸாதித்துக் கொள்ள முடிந்திருக்கிறது? துக்கத்தின் மூலத்தைக் கண்டுபிடித்து நிவிருத்தி பண்ணி வைக்க ஸ்வதந்திரத்துக்கும், ஸயன்ஸுக்கும் ஸாமர்த்தியம் உண்டா? பாபத்துக்குப் பரிஹாரம் செய்ய இவற்றால் முடியுமா? பாபத்தையும் துக்கத்தையும் போக்கிக் கொண்டு நிம்மதியாக நிறைவாக வாழ்ந்த நம் பெரியவர்களெல்லாம் சாஸ்திராச்சாரங்களை நன்றாக அனுஷ்டித்துத்தானே அந்த நிலையை அடைந்திருக்கிறார்கள்? என்று யோசித்துப் பார்த்தால் வாஸ்தவத்தில் எதை இப்போது ஸ்வதந்திரம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோமோ அதுதான் கட்டு என்று தெரியும். இதுதானே, நம்மை நித்ய ஸுகத்தின் பக்கம் போகவிடாமல் புண்யத்தின் பக்கம் போக விடாமல் துக்கத்திலும் பாபத்திலுமே கட்டி வைத்திருக்கிறது?

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

முதலில் சற்று பயந்து தயங்கிய வீரர்கள் க்ஷத்ரபனுக்குப் பயந்து அவன் கட்டளையை நிறைவேற்றக் கூட்டமாக வந்து தங்கள் தோள்களால் கதவை இடிக்கத் தொடங்கி அதற்குக் கதவு இடங்கொடாது போகவே இரண்டு பெரும் பாறைகளைத் தூக்கி வந்து கதவை உடைக்க முதல் பாறையை மோதியதுமே பிரளயம் விளைந்தது கோவில் முன்பாக.

உள்ளேயிருந்து துவாரத்தின் வழியாக பெரிதாகக் குழல் போல் ஊதினான் கௌதமி புத்ரன். அடுத்த விநாடி அவன் புரவி எங்கிருந்தோ பாய்ந்து வந்தது. திடீரென மரங்களின் மறைவுகளிலிருந்து மலைக்கற்கள் சரமாரியாக வீரர்கள் மீது விழுந்தன. பெருங்கூட்டம் எங்கிருந்தோ மலைப்பாதையில் வரும் பேரரவம் கேட்டது. அந்தப் பேரரவத்தை அடுத்து கோவிலின் பெருங் கதவு திறக்கப்பட்டு அதனருகில் நின்ற க்ஷத்ரபன் கழுத்தில் வாளின் நுனி ஊன்றப்பட்டது. கோட்டை வீரர்கள் வாளிகளை ஒருமுறை பிரயோகித்து இரண்டாவது முறை நாண்களில் அம்புகளைப் பூட்டிக் கொண்டே கோவில் வாயிலை நெருங்கிய சமயத்தில் வாயிற் கதவு திறக்கப்பட்டு உள்ளிருந்து வீசப்பட்ட காஷ்டானன் உடல் வேகமாக வீரர்களை நோக்கிப் பறந்து வந்தது. காஷ்டானனைச் சில வீரர்கள் பிடித்து இறக்கி விட்டதும் பூர்ண போருடை அணிந்து கௌதமிபுத்ரனும் சேனாதிபதியும் வாட்களை ஏந்தி வெளியே வந்தனர்.

காஷ்டானன் வெளியே வந்து விழுந்ததாலும் க்ஷத்ரபன் சேனாதிபதியின் வாள் நுனியில் திணறியதாலும் போருக்குச் சித்தமாக வாளை உருவி சாதவாகனன் பிரளயகால ருத்திரன் போல் நின்றதாலும் செய்வதறியாமல் நின்ற வீரர்களை நோக்கிய கௌதமி புத்ரன் "க்ஷத்ரபரை விடுதலை செய்கிறேன். அவரையும் பழைய மாப்பிள்ளையையும் அழைத்துக் கொண்டு கோட்டைக்குச் செல்லுங்கள். நாளைக்கு மறுநாள் நான் நாகபாணனைச் சந்திப்பதாகக் கூறுங்கள். இனி நீங்கள் செல்லலாம்" என்றான்.

மரங்களின் மறைவிலிருந்து பெரும் கூட்டமொன்று மீண்டும் வந்தது. அது திருமணக் கூட்டமல்ல. சிலர் கைகளில் கல்லும் மரக் கட்டைகளும் மற்றும் சிலர் கைகளில் வெட்டுக்கத்திகளுமிருந்தன. அவர்கள் முகங்களில் கொலைக்குறி இருந்தது. வில்லோ, அம்போ, வாட்களோ, பாதிப்பேரை அழித்தாலும் மிச்சம் பாதிப்பேர் தங்களை அழித்து விடுவார்களென்பதைப் புரிந்து கொண்ட க்ஷத்ரபன், வீரர்களைத் தன்னுடன் வரும்படி சைகை செய்து முன்னே சென்றான். அவனைத் தொடர்ந்தான் காஷ்டானன். அவனை எரிச்சலுடன் பார்த்த க்ஷத்ரபன், "எதற்கு என் பின்னால் வருகிறாய்?" என்று சீறினான்.

"நான் உங்கள் மாப்பிள்ளையாக வேண்டியவன்."

"இல்லை."

"இல்லையா?"

"இல்லை. நீ என்னைப் பிடித்த சனியன்." என்று கூறிவிட்டு வேகமாக நடந்தான் க்ஷத்ரபன்.

அவர்கள் சென்றதும் சித்தரஞ்சனியைத் தனது புரவியில் ஏற்றிவிட்டுக் கடிவாளத்தைத் தான் பிடித்துக்கொண்டு சண்டிகா தேவியின் குகைக் கோவிலை நோக்கி நடந்தான் கௌதமி புத்ரன்.

(தொடரும்)

# மௌனத்தின் கதவுகள்

5

சாமிநாதன் மருந்துகளுடன் திரும்பிய பொழுது இருட்டத் தொடங்கிவிட்டிருந்தது.

மழைக்காலத்து இருட்டு—மாலை ஆறு மணியளவிலேயே, சூரியன் வேகமாக மறைந்துவிட்டிருந்தது. இலேசான குளிர் காற்றில் உடம்பைச் சற்று சிலிர்த்துக்கொண்டார் அவர். ஒருகாலத்தில் மார்கழிக் குளிரில் பச்சைத் தண்ணீரை அலட்சியமாகத் தலையில் ஊற்றிக் கொண்டவர். அதிகாலைக் கடும்பனியில்மேல் துண்டுடன் அருகிலிருந்த கோவிலுக்குப் போய் வந்தவர். இப்போது? ஒரு சிறு துளி ஊதல் காற்று அவரது சட்டையைத் துளைக்கிறதே....? வயதும் தளர்ச்சியும் மட்டுமல்ல.... எதையும் தாங்கும் இதயம் கூட இப்போது துவண்டு போனதாலோ? கண்ணாடிக் கதவை மெள்ளத் தள்ளித்திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார்.

" மருந்து கிடைச்சதா? பணத்துக்கு என்ன செய்தேள்? பாங்கியிலிருந்து எடுத்தேளா? விமலா சன்னமான குரலில் கேட்டாள்.

'பாங்கில் லட்ச ரூபாய் இருக்கு, நினைச்ச போது எடுத்து செலவழிக்கலாம்! ஆஸ்பத்திரி பில்லுக்குக் கட்டினது போக ஆபத்துக்குன்னு ஒதுக்கி வச்சிருக்கிறதிலே கை வச்சா, கோவிந்தாதான்' சொல்லத் துடித்தார். அதெல்லாம் பற்றி இப்போது அவளுக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லையே?

''கிடச்சது'' மனைவியைக் கனிவுடன் பார்த்தார். 'அன்று சாலையில் அருணா நின்று கொண்டிருந்தாள். பட்டுப்புடவை அலங்காரத்தில் கடை வாசலில் தன் சிநேகிதிகளுடன் உன்னைப் பற்றி வம்பு பேசிக்கொண்டிருந்தாள்' என்பதைச் சொல்லவா? இல்லை கூடாது. ஏற்கெனவே நோயினால் நலிந்திருந்தவளிடம் அதிர்ச்சியான எதையும் கூறக் கூடாது.

மருந்துகளை அருகிலிருந்த சிறு மேஜை மீது வைத்தார். அந்த இளைய டாக்டர் வந்து கேட்குமுன், கண்களில் படும்படி, எல்லாவற்றையும் பரப்பி வைக்க வேண்டும். ஏனோ அவர் மனத்தில் அந்த இளைஞனின் நினைப்பு உறுத்திக் கொண்டிருந்தது. கண்ணாடிக் கதவு திறக்கப்படும் ஓசை அவரைத் திரும்பிப் பார்க்கச் செய்தது.

வந்தவன் அந்த இளைய டாக்டர் அல்ல!

''டாக்டர் மோகன் சிஃப்போட ரவுண்ட்சிலே இருக்கார். நோயாளியைப் பரிசோதித்து விட்டுப் போக நான் வந்திருக்கேன். இவங்க....?'' மெல்ல முறுவலித்தான் அந்தப் புதிய இளைய டாக்டர். அரும்பு மீசையும் தீர்க்கமான பார்வையும், புன்னகைத்த முகமுமாக நின்ற அந்த இளைஞனை அவருக்குப் பிடித்தது. டாக்டர் மோகனுக்கு எதிரில் எத்தனை மாறுதலான குணம் இவனுக்கு?

''என் மனைவி. இன்னிக்குத்தான் கண் விழிச்சுப் பார்க்கிறு.''

''பொறுமையா டாக்டர் சொல்றபடி கேட்டு நடக்கிற நோயாளி போலிருக்கே.''

''என்ன சொல்றீங்க டாக்டர்?''

''சில நோயாளிகள் டாக்டர் சொல்றச்சே மட்டும் தலையாட்டுவாங்க. டாக்டர் அப்பால் போனதும் இஷ்டப்படி இருப்பாங்க. பிறகு டாக்டர் மறுபடி வரச்சே, என் உடம்பு இன்னமும் சரியாகலேன்னு முணுமுணுப்பாங்க. நோய் வரது நொடியில் வந்துடும். ஆனால் குணமாக கொஞ்ச நாள் பிடிக்கும். நோயாளிக்குக் கொஞ்சம் மன உறுதியும் நிதானமும் தேவை. குரங்கை நினைச்சுகிட்டு மருந்தைச் சாப்பிடக் கூடாது பாருங்க...'' வரிசைப் பற்கள் தெரியச் சிரித்தான் அவன்.

அவரது நெஞ்சிலே ஒரு சிறு வேதனை. இதயத் தசையையாரோ மெல்லமுறுக்குவது போன்றதொரு வலி. அவரது மகன் ரகு இப்போது இருந்தால்.....? விமலா சொல்லிக் கொண்டிருந்தாள். ''நம்ம ரகுவை டாக்டருக்குப் படிக்க வைக்கணும்னு ஆசையா இருக்கு!'' என்றாள் பல தடவை.

அவர் மகன் ரகு உயிருடன் இருந்து டாக்டருக்குப் படித்துவிட்டிருந்தால்.... இப்படித்

தான் கனிவும் அன்பும் உள்ள ஒரு நல்ல டாக்டராக இருந்திருப்பான். கட்டாயம் விமலாவின் நல்ல குணங்கள் எல்லாம் அவனிடம் ஒண்டிக் கொண்டிருக்கும்.

'உன்னைப் போல இப்படி அன்பாப் பேசினா போறுமே—வியாதி தானே ஓடிப் போயிடும்!' மனத்திற்குள் நினைத்தவராய் அவர் ஒதுக்குப்புறமாக வெளியே வந்து நின்றார்.

விமலாவைப் பரிசோதித்துவிட்டு அவன் வெளியே வந்தான்.

''இன்னும் சில நாளில் உங்க மனைவி பூரண குணமாகி வீட்டுக்கு வந்துடுவாங்க. இப்பவே நல்ல இம்ப்ரூவ்மெண்ட் தெரிகிறது. கவலைப்படாதீங்க'' வசீகரமான புன்னகையுடன் அந்த இளைஞன் வராந்தாவின் மறு பக்கம் திரும்பினான்.

''எக்ஸ்கியூஸ் மீ.....'' சுவாமிநாதன் அவனருகில் சென்றார்.

''உங்க பெயர்?''

''செல்வம். ஏன் கேட்கறீங்க?''

''வழக்கமா வருகிறவர் பெயர் மோகன்னு தெரிஞ்சு கொண்டேன். உங்கள் பெயரும் தெரிஞ்சுக்க விருப்பமா இருந்தது.''

''டாக்டர் மோகன் இன்னும் கொஞ்ச நேரத்தில் வருவார். நான் இந்த நர்ஸிங் ஹோமில் இரண்டு மாசத்துக்கு முந்தித்தான் வேலையில் சேர்ந்தேன். மோகன் எனக்கு ஸீனியர்'' என்றபடி அவன் மெலிதாய் முறுவலித்துவிட்டு நகர்ந்தான்.

இவ்வளவு நேரம் டாக்டர் மோகன் மட்டும் அங்கே இருந்திருந்தால், அசட்டையாக மருந்துகளைப் பற்றிக் கூறிவிட்டு, ஊசியைச் செலுத்திவிட்டு புயல் போல வெளியேறியிருப்பான். அவனைப் போன்ற இளைஞர்களுக்கு நேரம் மிகவும் முக்கியம்— நோயாளிகளின் மனத்தைப் பற்றிக் கவலையில்லை. நிற்க நேரமில்லாது, மனித உடலை இயந்திரமாகக் கருதிச் செப்பனிடும் தொழிலாளி, அவ்வளவே.



பரக்கென்ற சப்தத்துடன் கதவு திறந்து கொண்டது. மோகன் பரபரப்பாக நுழைந்தான்.

''டாக்டர் செல்வம் வந்து பார்த்தாரா?''

''பார்த்தார்.''

''மருந்துசாப்பிடும்விவரம்சொல்லியிருப்பார்.''

''இல்லே. நீங்க அவரது ஸீனியராம். எல்லாம் நீங்க சொல்லுவேள்னு போய்விட்டார்.''

கண்களில் லேசாக கர்வம் பளிச்சிட டாக்டர் மோகன் அவரை நிமிர்ந்து பார்த்தான். ஸ்டதெஸ்கோப்பின் நுனியைச் சுழற்றினன். ''உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் இல்லே. நர்ஸுக்கு இன்ஸ்ட்ரக்ஷன் கொடுத்துட்டு போனால் போதும்'' என்றபடி கேஸ் ஷீட்டை எடுத்து பரபரப்பாக எழுதினன்.

''இன்னும் எத்தனை நாளைக்கு இந்த மருந்துகள் தரணும் டாக்டர்?''

மோகனின் புருவங்கள் உயர்ந்தன, ''வியாதியைப் பெரிசா வரவழைச்சுக் கொண்டு மருந்து சாப்பிட அட்டவணை போடப் பார்க்கறீங்களே?''

''வியாதியை யாரும் வரவழைச்சுக்கொள்வதில்லே. அது கூப்பிடாம வர்ற விருந்தாளி மாதிரி....'' சுவாமிநாதன் வேடிக்கையாகச் சொன்னர்.

மோகனின் முகம் கோபத்தால் சிவந்தது. ''டாக்டரைத் தேடி உயிரைக் காப்பாத்துங்கன்னு ஓடி வரும்போது எல்லாமே மறந்துடறது. இப்போ அபாயமில்லேன்னு தெரிஞ்சதும் பேச்சே மாறிடறது''

சுவாமிநாதன் சிரிக்கமுயன்றார். ''டாக்டர் மோகன் உங்களுக்கு எந்த ஊர்?''

''எதுக்குக் கேட்கறீங்க?''

''உங்களுக்குப் பெற்றேர்கள் இருக்கிறங்க இல்லையா?''

இளைய டாக்டர் முகத்தில் கோபம் கடுமையாகியது. ''உங்களுக்கு எதுக்கு என் சரித்திரம்? அடுத்தபடியா ஜாதகம் கேட்பீங்க போலிருக்கே!'' ஏளனமாக அவரை முறைத்தான்.

''எனக்குக் கல்யாணத்துக்குப் பெண்ணும் நிற்கலே, பிள்ளையும் காத்திருக்கலே. நீங்க சொல்றது எனக்குப் புரிகிறது டாக்டர். உங்களுக்குத் தெரிய வேண்டியது நோயாளியின் சரித்திரம். ஆனல் நான் உங்ககிட்ட ஒரு சின்னச் சங்கதியைப் பற்றிப் பேச விரும்பறேன்'' சுவாமிநாதன் துணிவுடன் டாக்டர் மோகன் அருகே வந்தார்.

''என்னமோ புதிர் போடுகிறீர்களே, சீக்கிரம் சொல்லுங்க. எனக்கு ஏகப்பட்ட வேலே கிடக்கு!''

''நோயாளியின் சரித்திரம் நீங்களுக்குக் கட்டாயம் தெரியணும், அதைத் தெரிஞ்சுண்டு சிகிச்சையை ஆரம்பிக்கிறீங்க.''

''இதிலே ஆராய்ச்சிக்கு என்ன இருக்கு?'' எரிச்சலுடன் கேட்டான் மோகன்.

''ஆராய்ச்சி இல்லே. சிகிச்சை செய்கிற டாக்டருக்கு இருக்க வேண்டிய குணங்களின் அவசியத்தைத்தான் சொல்றேன்!''

கிழவனுக்கு ரொம்பத் திமிர், ரெண்டு நாள் முன்னர் மூச்சு விடப் பயந்து அடங்கிக் கிடந்தவன், வாய் கிழியப் பேசுகிறனே? டாக்டர் மோகன் தன் கழுத்தில் ஸ்டதெஸ்கோப்பை மாட்டிக் கொண்டான், வெளியே செல்ல ஆயத்தமானன்.

''என் மகன் உசிரோட இருந்திருந்தா உங்க வயசுக்கு வளர்ந்திருப்பான், அந்தத் தகுதியிலுலே பேசறேன்!'' அழுத்தமாக, அதே சமயம் கனிவுடன் பேச ஆரம்பித்தார் சுவாமிநாதன்.

டாக்டர் மோகன் இருப்புக் கொள்ளாதவனைப் போல தவித்தான்.

கிழவன் ஏதோ பேத்துகிறன். போகட்டும் என்ற பாவம் அவனது முகத்திலே நிதர்சனமாகத் தெரிந்தது.

''நீங்க இளைய தலைமுறையைச் சேர்ந்தவங்க. இந்த வயசிலே இருக்க வேண்டிய துடிப்பு, வேகம் எல்லாம் உங்ககிட்ட இருக்கு. நான் ஒத்துக்கறேன். ஆனல் ஒண்ணு இல்லே.''

அவன் தலை நிமிர்ந்து அவரை வெறித்தான்.

## யார் பெரியவர்?

மொகலாயப் பேரரசர் அக்பர் தமது சபையோரிடம் —

''நான் பெரியவனு அல்லது கடவுள் பெரியவரா?'' என்று கேட்டுவிட்டு, அதற்குரிய காரணத்தையும் சொல்லும்படி கூறினர்.

உடனே பீர்பால், ''அரசே, அண்ட சராசரம் முழுவதும் கடவுளுடையதாக இருப்பதால், கடவுளால் தனது அரசை விட்டு ஒரு மனிதனை நாடு கடத்த முடியாது. ஆனல் தாங்கள்..... தங்களுக்குப் பிடிக்காதவனை வெகு சுலபமாக நாடு கடத்திவிடுகிறீர்கள். ஆகவே நீங்கள் தான் பெரியவர்'' என்றார்.

'மெர்வின்' எழுதிய ''அறிஞர்கள் வாழ்வில் நடந்த அதிசயங்கள்'' என்ற புத்தகத்திலிருந்து.

— கே.வி. நாதன்.





''தலைவலியை விலை கொடுத்து வாங்கினியா?''

''ஆமாம். டீ.வி. வாங்கியிருக்கேன்.''

— இளை அ. கதிர்வேல்.



''ஒரு டாக்டருக்கு இருக்க வேண்டிய பணிவும், கனிவும் உங்ககிட்டே இல்லே. அதுக்கு நீங்க வருத்தப்படுகிறீர்களோ இல்லையோ நான் வருத்தப்படறேன். நல்லதிறமை இருந்தால் மட்டும் போதாது. சிடுமூஞ்சியா டாக்டர் இருந்தால் அவர்கிட்டே போகவே நோயாளிகள் பயப்படுகிறார்கள். என் அனுபவத்திலே நான் கண்ட உண்மை இது. உங்களுக்கு வருங்காலம் இனிமேதான் ஆரம்பமாகப் போகிறது. ஒருவேளை பிற்காலத்திலே நீங்க ஒரு பெரிய நர்ஸிங் ஹோம் வெச்சு நடத்தலாம். உங்க சீஃப் போல பல குட்டி டாக்டர்கள் பின்னால் புடைசூழ வேகமா ரவுண்ட்ஸ் செய்யலாம். உங்ககிட்டே பணிவும் அன்பும் இல்லாட்டா என்ன பயன்?''

டாக்டர் மோகனின் காது மடல்கள் சூடாகிப் போயின. பற்களைக் கடித்தபடி சுவாமிநாதனை வெறித்துப் பார்த்தான்.

''என்கிட்டே கோபிச்சுக்கிறதிலே அர்த்தமில்லே. உண்மை நீங்க கொடுக்கிற மாத்திரை சிலது போல வெளியே இனிப்பு பூசிக் கொண்டு வராது. கசப்பாத்தான் இருக்கும்.''

இளைய டாக்டரின் முகத்தில் கடுமை போய் லேசான சிரிப்பின் இழை படர்ந்தது.

''தப்பா நினைக்காதீங்க, நீங்க சின்ன வயசுப் பையன். என் அனுபவத்தைக் கொண்டு நான் சொன்னேன். நோயாளிகள்கிட்டே அன்பா நடத்துக்கோங்க. அவங்களும் மனுஷங்கதான்''

டாக்டர் மோகன் எதுவும் பேசமுடியாது அதிர்ந்தவனாகக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினான்.

''எதுக்கு அவர்கிட்டே போய் நீங்க உபதேசம் செய்யப் போறேள்? ஏற்கனவே கொஞ்சம் படபடப்பா பேசற ஆசாமி அந்த டாக்டர்.....''

''அந்த மாதிரியான படபடப்பு, இந்த மாதிரி வேலையிலே கூடாதுன்னு புத்தி சொன்னேன். இது தப்பா?''

''மூஞ்சியிலே எள்ளும் கொள்ளும் வெடிக்க வராரே அந்தப் பெரிய டாக்டர், அவர்கிட்டே சொல்லிப் பார்க்கிறதுக்கென்ன?'' விமலா லேசாகச் சிரித்தாள்.

''இளம் கொம்புகளைத்தான் வளைக்க முடியும். முத்திப் போன கிளைகளை வளைச்சா ஒடிஞ்சிடும்.''

''இளம் வயசு டாக்டர் அவர். ரத்த வேகம். நம்ப வயசென்ன? அவர் வயசென்னன்னு நாம் ஒதுங்கிடணும்.''

''அங்கேதான் நாம எல்லாரும் தப்பு செய்கிறோம் விமலா. சின்ன வயசு, பெரியவா, ஜெனரேஷன் கேப் அப்படின்னு நாமாகவே ஒரு இடைவெளியை உண்டாக்கி, இளைய தலைமுறையை வெட்டி விட்றோம். பெரியவர்கள் சொல்கிறதையெல்லாம் இளைஞர்கள் கேட்க மாட்டார்கள்னு முடிவுக்கு வந்துடறோம். இது பெரிய தவறு. நாம் செய்த தவறுகளை இளைய சமுதாயம் செய்யக் கூடாது. தெரிந்தோ, தெரியாமலோ நாம் கற்றுத் தேர்ந்த அனுபவங்களை அவாளுக்குச் சரிவரத் தெளிவாச் சொல்லணும்.''

''அது சரி; கேட்க அவர்களுக்குப் பொறுமை இருக்குமா?'' முனகினாள் விமலா.

''ஏன் இருக்காது? இந்த மண்ணிலே தோன்றிய குழந்தைகள்தானே அவாளும். ஒரு சமயம் இல்லாட்டா ஒரு சமயம் நாம சொல்ற புத்திமதிகளை அவர்கள் சிந்திச்சுப் பார்ப்பார்களே?''

''என்னவோ எனக்கு இதெல்லாம் புரியலே, தலை சுத்தறது.''

''ஸாரி விமலா, நீ கண்ணை மூடிண்டு ஒய்வா இரு. நான் இப்ப உன்கிட்ட தொணதொணக்கக் கூடாது.''

வெளியே வந்து வராந்தாவிலிருந்த பெஞ்சி மீது உட்கார்ந்து கொண்டார். கேசவனின் சிரித்த முகம் அவரது நினைவில் நிழலாடியது. இருபத்தைந்து வயது இளைஞன் போல் தென்படும் கேசவன், இந்தச் சின்ன வயதில் பத்தாயிரம் பதினைந்தாயிரம் என்று கட்டுக்கட்டாகப் பணத்தைவைத்துக்கொண்டிருக்கிறானே, எப்படி? அவன் செய்யும் வியாபாரத்தில் அத்தனை பணத்தைப் புரட்டும்படியாகத் தோன்றவில்லையே? ஒரு சிறு பொந்து போன்ற சிறு கடை. கண்ணாடிப் பெட்டிகளில் விளம்பரத்திற்கு வைத்திருந்த இரண்டொருநகைகள். அப்படிபிரமாதமானதாகத் தெரியவில்லை. சீட்டு நாட்டு எதுவும் இன்றி மூவாயிரம் ரூபாய்களை எண்ணி அவரிடம் தந்தானே.... எப்படிச் சாத்தியமானது? எப்படி? இதுவென்று அவரது சிந்தனை வேறு ஒருபக்கமாகத்திரும்பி மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

# விளையாட்டு

## திருவினையான தெருவிளையாட்டு

பள்ளிப் பருவத்தில் நானும் நண்பர்களும் பொழுது சாய்ந்த நேரத்தில் பக்கத்திலுள்ள குன்றின் மீது அமர்ந்து அரட்டையடிப்போம். அதில் சர்ச்சைகளும், விவாதங்களும் சூடு பறக்கும்; தீர்மானங்களும் பிறக்கும். அப்படியொரு தீர்மானத்தின் விளைவாகத் தெருவிலிருந்து வாய்க்காலுக்குச் செல்லும் பாதையை நாங்களே விளையாட்டாக மண் சுமந்து செப்பனிட்டோம். வேடிக்கை பார்த்த பஞ்சாயத்துத் தலைவருக்கு ரோஷம் பிறந்தது — சபதம் எடுத்தார்! அரும்பாடுபட்டு நெல்லை—அம்பைப் பெருவழியைக் கிராமத்தோடு இணைக்கும் பாதையைச் சீரமைத்து, டவுன் பஸ் போக்குவரத்துக்கும் வழி வகுத்தார். எங்கள் தெரு விளையாட்டு திருவினையாகியது!

— எஸ். கே. சுப்பிரமணியன், சுத்தமல்லி.

## காலாட்டி கணேசன்

திருமணத்திற்கு முன் என் சொந்த ஊரில் இருந்தபோது, மாலை வேளைகளில் பக்கத்து வீட்டுச் சிறுவனுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பேன். ஒருநாள் 'காலில் கொசுக் கடிக்கிறது' என்று அவன் கூறியபோது, கவனம் சிதறாமலிருப்பதற்காகக் 'காலை ஆட்டிக் கொண்டே இரு' என்று நான் கூற அதுவே நாளடைவில் ஒரு பழக்கமாக மாறி விட்டது. இப்போது அந்தப் பழக்கம் அலுவலகத்திலும் தொடர்வதால் சக ஊழியர்கள் அனைவரும் அவனைக் 'காலாட்டி கணேசன்' என்றே கூப்பிடுகிறார்களாம். இதை சமீபத்தில் அவனே என்னிடம் கூறியபோது மிகவும் வருந்தினேன்.

— கமலப்ரியன், கொச்சின் — 16.

## நானே நொந்த விளையாட்டு

எங்கள் வீட்டிற்கு வந்திருந்த பக்கத்து வீட்டுச் சிறுமி, தொட்டியில் செழித்து வளர்ந்திருந்த செடிகளைப் பார்த்து, "ஆன்ட்டி, எங்க வீட்டிலே இப்படி செடிங்க செழிப்பா வளரலையே?" என்றாள். அதற்கு நான், "சின்னக் குழந்தைகளை வெந்நீரில்தான் குளிப்பாட்டணும். இல்லையென்றால் சளிப் பிடிக்கும் இல்லையா? அதேபோல்தான் செடிகளும். சின்ன செடிங்களா இருக்கிறதனாலே வெந்நீர் ஊற்றினால்தான் செழிப்பா வளரும்!" என்று விளையாட்டாகச் சொல்லப் போக அந்தச் சிறுமியும் குளிக்க வைத்திருக்கும் வெந்நீரைத் தினமும் செடிகளுக்கு ஊற்ற.... பாவம்! செடிகளெல்லாம் பட்டுப் போய் விட்டன. என் விளையாட்டை நினைத்து நானே நொந்து கொண்டேன்.

— எம். கல்யாணி, சிவகாசி.

## பழிக்குப் பழி!

யு.கே.ஜி. படிக்கும் என் அக்காள் மகன் ஒருநாள் அவனை மற்ற சிறுவர்கள் அடித்தார்கள் என்று அழுது கொண்டே வீட்டுக்கு

வாசகர்



# ினையாகியது



பங்கு

வந்தபோது, நான் அவனிடம் விளையாட்டாக, ''இனிமேல் யாராவது உன்னை அடித்தால் நீயும் திருப்பி அடி'' என்றேன். மறுநாள் அவன் பள்ளியிலிருந்து, ''நீங்கள் உங்கள் பையனைக் கண்டித்து வையுங்கள். இன்று அவனை அடித்த ஆசிரியரைத் திருப்பி அடித்து விட்டான்!'' என்று வீட்டிற்கு ரிப்போர்ட் வந்தது. நான் அதிர்ச்சியடைந்துவிட்டேன்.

— ஆர். பாலாஜி, திருத்தணி

### விளையாட்டை விட்டுவிட்டோம்!

என்னுடைய நண்பனுக்கு வயதாகியும் மீசை வளராததால் அவனை நாங்கள் 'ஆண்மையில்லாதவன்' என்று கேலி செய்வது வழக்கம். இப்போது அவன் ஒரு விபத்தில் அடிபட்டு நிஜமாகவே ஆண்மையை இழந்துவிட்டான். எங்களின் விளையாட்டே வினையாகிவிட்டது. அதனால் அவனைவிட நாங்களே அதிகமாகப் பாதிக்கப்பட்டோம். அதிலிருந்து நாங்கள் அப்படி விளையாடுவதையே விட்டுவிட்டோம்.

— டி. கோபாலகிருஷ்ணன்,
கோயம்புத்தூர்—5

### முதல் கடிதம்

நான் போஸ்ட்மேனாக வேலை பார்த்த போது நடந்தது இது. ராணுவத்தில் பணி புரியும் தன் மகனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா என்று அந்த மூதாட்டி கேட்காத நாட்களே குறைவு. அதனால் நான் ஒரு தீபாவளியன்று அவருடைய மகன் அனுப்பியது போல் ஒரு வாழ்த்துக் கடிதத்தைக் கொடுக்க, உடனே அவர், ''ஐயோ மகனே!'' என்று அலறியபடியே மயக்கமாகி விழுந்தார்; பிறகு எழுந்திருக்கவேயில்லை. கடைசியில்தான் தெரிந்தது தனக்குக் கடிதம் எழுதத் தெரியாததாலும், பிறரிடம் எழுதித் தரச் சொல்வதையும் அவமானமாக நினைப்பதாலும் தன்னிடமிருந்து கடிதம் ஏதும் வராது என்றும், அப்படி ஏதாவது வந்தால் அது தனது வீர மரணம் பற்றி அரசாங்கத்திடமிருந்து வரும் கடிதமாகத்தான் இருக்கும் என்றும் தன் தாயிடம் சொல்லிவிட்டுச் சென்றிருந்தானாம் அவன். அதன்பிறகு நான் அந்த போஸ்ட்மேன் வேலையையே விட்டுவிட்டேன்.

— எஸ். சங்கரசுப்பு, திருச்செந்தூர்.

### அறிவை மறைத்த சினிமா

என் ஐந்து வயது மகன் சாப்பாட்டு விஷயத்தில் மிகவும் பிடிவாதம் செய்வான்; சரியாகச் சாப்பிடமாட்டான். அவன் கமலஹாசன் ரசிகன் (!) ஆனதால், அவனிடம், ''கமல் நிறைய காரட், தயிர், வெங்காயம் எல்லாம் சாப்பிட்டதால்தான் நிறைய பலம் வந்து உயரமான மாடிகளிலிருந்து கீழே குதிக்கிறார்!'' என்று கூறினேன். அவனும் சரியென்று சாப்பிட்ட பிறகு மாடிக்குச் சென்று பால்கனியிலிருந்து கீழே குதித்து விட்டான். நல்லவேளையாகப் பூமியில் மணல் கொட்டப்பட்டிருந்ததால் தப்பித்தான்!

— கே. சந்திரா, ஆதம்பாக்கம்.

## விளையாட்டாக ஒரு கிராம சேவை!

ஒருநாள் எனது தாத்தா ஒரு பத்திரத்தில் ரேகை பதிப்பதைக் கண்ட நான் அவரைக் கிண்டல் செய்துவிட்டு, தமாஷாக அவருக்குக் கையெழுத்துப் போடக் கற்றுக்கொடுக்க ஆரம்பித்தேன். அவரைப் பார்த்து, கிராமத்திலிருந்த மற்ற பெரியவர்களும் என்னிடம் வந்து கையெழுத்துப் போடப் பழகிக் கொண்டு பெருமிதப்பட்டனர். விளையாட்டாகத் துவங்கிய நிகழ்ச்சி, எங்கள் கிராமத்தில் ரேகைப் பழக்கத்தையே ஒழித்துவிட்டது.

— திருமதி செண்பகவள்ளி மாடசாமி, ஏனாதி

## விளையாட்டாய் ஒரு லைப்ரரி!

எங்கள் தெருவிலுள்ளோரிடம், ''உங்களிடம் உள்ள படித்த நாவல்கள் மற்றும் இலக்கியப் புத்தகங்கள் இருந்தால் கொடுங்கள். மற்றவர்களுக்கும் படிக்கக் கொடுத்து உதவுவோம்!'' என்று சொல்ல, இரண்டே நாட்களில் சுமார் இருபது புத்தகங்கள் சேர்ந்துவிட்டன. அவற்றை மற்றவர்களிடம் கொடுத்துப் படிக்கச் செய்தேன். விஷயம் வெளியில் பரவவே அடுத்த ஒருவாரத்தில் ஐநூறுக்கு மேற்பட்ட புத்தகங்கள் அன்பளிப்பாக வந்து குவிந்துவிட்டன! இப்போது 'பிரண்ட்ஸ் புக் சென்டர்' என்ற பெயரில் அது சிறப்பாக வெற்றி நடை போடுகிறது. அதன் மூலம் எங்கள் காலனியே பயனடைகிறது.

— எஸ். கவிதா, நெய்வேலி.

## இப்போது நினைத்தாலும்.....

ஒருநாள் இரவு எட்டு மணி சுமாருக்குச் சாப்பிட்ட என் பத்து வயதுத் தம்பி, கை கழுவ வெளியே வரப் பயந்து கொண்டிருந்ததைக் கண்டு, என் தாயும், அண்ணனும் கேலி செய்ய, அவனும் ஒருவாறு தன்னை தைரியப்படுத்திக் கொண்டு வெளியே வந்த போது, அவனை எதிர்பார்த்து ஒளிந்து கொண்டிருந்த நான், 'ஓவ்' என்று கத்தினேன். ''அம்மா'' என்று பயத்தில் அலறி விழுந்தான் அவன். பிறகு எழுந்திருக்கவே யில்லை. பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன்பு நடந்த இந்த நிகழ்ச்சியை இப்போது நினைத்தாலும் வேதனையில் அழுதுவிடுவேன்.

— பி. பாஸ்கரன், குருவிகுளம்.

## ஆபத்தான அறிவுரை

சில ஆண்டுகளுக்கு முன்பு நான் பெங்களூரில் வசித்தபோது ஒருநாள், பிரசவமான பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தி சில சொல்ல முடியாத வலிகளால் அவதிப்பட்டுக்கொண்டிருந்ததைக் கண்ட நான், அந்த வலிகளை மறக்கச் சிறிது பிராந்தி குடித்து வரும்படி சொன்னேன். விளைவு? சமீபத்தில் நான் பெங்களூர் சென்றபோது அவள் வீட்டில் பிராந்தி பாட்டில்கள் நிரம்பி வழிந்தன. ஆம்: இன்று அவள் குடிகாரியாகவே மாறி விட்டாள். என்னை நானே நொந்து கொண்டு திரும்பினேன்.

— டி. பதிபூரணம், சென்னை—49.

## உண்மையறியாத குழந்தை

''இன்று வெயிலின் கொடுமை தாங்க முடியவில்லை; பிரிஜ்ஜைத் திறந்து அதனுள் தான் உட்காரவேண்டும்!'' என்று கூறியதைக் கேட்ட என் ஐந்து வயது மகன், நாங்கள் மாடிக்குச் சென்றவுடன், பிரிஜ்ஜின் கதவைத் திறந்து உள்ளே உட்கார்ந்து கொண்டிருக்கிறான். சுமார் ஒருமணி நேரம் கழிந்த பிறகு நாங்கள் அவனைத் தேடிக் கொண்டு வந்த போதுதான் அவன் பிரிஜ்ஜுக்குள் மூச்சு முட்ட உட்கார்ந்திருந்ததைக் கவனித்தோம். அதிலிருந்து அவனை வைத்துக் கொண்டு நாங்கள் விளையாட்டாக எதையும் பேசுவதில்லை.

— திருமதி லக்ஷ்மிபாய், ஹொசப்பேட் (கர்நாடகா)

## தோட்டத்தில் கற்ற திருக்குறள்

நாங்கள் திருச்சியிலிருந்தபோது, பக்கத்து வீடுகளிலிருந்த மாணவிகள் எங்கள் வீட்டுத் தோட்டத்திற்கு வந்து விளையாடுவார்கள். அப்போது ஒருநாள் நான் அவர்களிடம், ''விளையாடிய நேரம் போக மற்ற நேரங்களில் தினமும் பத்துப் பத்துத் திருக்குறளாக மனப்பாடம் செய்து என்னிடம் ஒப்பிக்க வேண்டும்!'' என்றேன். அவர்களும் உற்சாகத்தோடு அப்படியே செய்தனர். சுமார் ஆறே மாதங்களில் அந்த ஐந்து மாணவிகளும் பிழையின்றித் தங்கு தடையின்றி 1330 குறள்களையும் ஒப்பிக்கும் திறனைப் பெற்றுவிட்டனர். மகிழ்ச்சியோடு அவர்களை அழைத்துச் சிறு விருந்து வைத்து ஆளுக்கொரு கைக்கடிகாரம் பரிசளித்தேன்.

— நீரஜா மூர்த்தி, பெங்களூர்—19.

---

ப்ளோபிளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

எஸ். கே. சுப்பிரமணியன்,
பெருமாள் கோயில் தெரு,
சுத்தமல்லி—627 604.

காட்பரிஸ்

# போர்ன்விடா

## சுறு சுறுப்புப் பானம்!



"ஒரு டம்ளர் பாலிலே இரண்டு ஸ்பூன் போர்ன்விடா அதுவே கலமான சுவையான பானம்—அதை, என் குழந்தைகளுக்கு அன்றாடம் இருவேளை தருகிறேன்.

என் குழந்தைகளுக்கு, கோகோ, மால்ட், பால், சர்க்கரை ஆகியவற்றின் போஷாக்கினைத் தருகிறது போர்ன்விடா. அவர்கள் வளரும் காலம் முழுவதும் அவர்களுக்குத் தேவைப்படும் ஊட்டச் சத்தையும் சக்தியையும் அளிக்கிறது. அவர்கள் நல்ல வளர்ச்சி பெறுகிறார்கள். ஆகவே நல்ல வளர்ச்சி, போர்ன்விடா பயிற்சி."

*போர்ன்விடாவின் இனிமைக்காலம். போர்ன்விடா அளித்தவரை பாசமணங்கள் நேசத்தோடு நினைந்து மகிழும் ஒருநாள்.*




இப்போது மிச்சமாக்கிடுவீர் ரூ. 2/- ஒவ்வொரு ரீபில் பேக்கிலும்.

OBM/4688/TAM

"ஆமா.....என்னேக்கிரிடிஸைஸ்பண்ணறதுக்கு, விமர்சிக்கிறதுக்கு இவருக்கு என்ன அதிகாரம் இருக்கு? யோக்கியதை இருக்கு? மத்தவங்க உணர்ச்சிகளைக் கொஞ்சம்கூட மதிக்காத ஜன்மங்களப்பா....! எனக்குன்னு வாய்ச்சிருக்கு.மனதுக்குஒருநிம்மதிஉண்டா? எந்த நிமிஷத்திலே என்ன சொல்வாங்களோன்னு. செத்து செத்துப் பிழைக்க



வேண்டியிருக்கு. இப்படியிருக்கிறதை விட ஒரேயடியாப் போயிடலாம். என் குழந்தையின் முகத்துக்காக இந்த மானங்கெட்ட பொழப்புப் பொழைக்க வேண்டியிருக்கு!"

அரைபட்டுக் கொண்டிருந்தவர் கார்த்திக்கின் அப்பா ராமனுதன். அரைத்துக் கொண்டிருந்தவள் கார்த்திக்கின் மனைவி ராதா.

கார்த்திக் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் முகத்தைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. நல்ல வேளை, அவன் பெற்றோர்களும், பத்தாம் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் தம்பியும் வீட்டிலில்லை. ஷாப்பிங் போயிருந்தார்கள். அவன் ஆறு வயது மகன் பக்கத்து வீட்டில் விளையாடிக் கொண்டிருந்தான்.

வேறொரு சமயமாயிருந்தால், "என்னடி சொல்றே? அவர் என் அப்பா.... உன்னைத் திருத்தவும், கண்டிக்கவும் அவருக்கு நிச்சயமாக உரிமை உண்டு. அவரைப் பத்தி தாறுமாருக ஏதாவது சொன்னு, எனக்குக் கெட்ட கோபம் வரும்" என்று கொதித்திருப்பான்; முகம் சிவக்கப் பல்லை நறநறவென்று கடித்திருப்பான்.

ஆனல் அவனுக்கே தன் அப்பா கொஞ்சம் எல்லை மீறுகிருரோ என்று தோன்ற ஆரம்பித்திருந்தது. அதை எப்படிச் சமாளிப்பது என்று புரியவில்லை. மனைவிக்குச் சிறிது தணிந்து பேச, 'நீங்கள் செய்தது தவறு' என்று அப்பாவிடம் சொன்னல், "ஓகோ... தலையணை மந்திரம் போட்டுட்டாளா.... என்னடி மங்களம்.... நாம சிவனேன்னு ஒரு மூலையில் உட்கார்ந்து அடிமைகளா இருக்க வேண்டியதுதான். அல்லி ராஜ்யம் ஆரம்பிச்சிடுத்தோயில்லையோ" என்று அம்மாவிடம் ஆத்திரத்துடன் கூறி மனஸ்தாபப் பட்டுக் கொண்டு விடுவார்.

பெரும் மனக் குழப்பத்தோடு, ராதாவைச் சமாதானப்படுத்தும் வகையில் பேச ஆரம்பித்தான் கார்த்திக். "ராதா.... இப்போ என்ன ஆயிடுச்சுன்னு இப்படி வேதனைப் படறே?"

ராதா அவனை அப்படியே எரித்து விடுபவள் போல் ஒரு முறை முறைத்தாள். "ஆமாமா.... சொல்வீங்க..... ஏன்னு ரணப் பட்டிருக்கிறது என் மனசுதானே? உங்களுக்கென்ன வந்தது?"

"ராதா, இந்தச் சின்ன விஷயத்தை ஏன் பெரிசு பண்ணறே? நான்....." என்று ஆரம்பித்தவனை இடைமறித்தாள் ராதா.

"எது சின்ன விஷயம்? ஆமாமா.... எல்லாமே சின்ன விஷயம்தான். நாளைக்கு உங்க வீட்டுக்காரங்க யாராவது என்னை அடிச்சாக் கூட அதுவும் சின்ன விஷயம்தான். நானும் காலையிலேயிருந்து சாயந்தரம் வரை ஆபீஸிற்குப் போய் உழைச்சிட்டு வரேன். சாயந்தரம் வந்ததும் எனக்குக் கொஞ்சம் ரெஸ்ட் தேவைப்படத்தான் செய்யறது. நானென்ன மெஷினு? இடைவெளியே இல்லாம தொடர்ந்து வேலை செய்யறதுக்கு? சாயந்திரம் வந்து கொஞ்ச நேரம் டி.வி. பார்த்துட்டு இருந்துட்டேனும். உங்கப்பா என்னை இடித்

துக் காட்டற மாதிரி, உங்க தம்பிகிட்டே, "ஹாயா, உட்கார்ந்துட்டியா.... என்ன நெனச்சிட்டிருக்கே. அம்மா என்ன இந்த வீட்டு வேலைக்காரியா? போய்க் கொஞ்சம் ஹெல்ப் பண்ணக் கூடாதா? இப்படியே வேலை செஞ்சு வேலை செஞ்சு துரும்பாயி ஒரு நாளைக்குப் படுக்கையிலே விழுந்துடுவா. போடா போ.... அம்மாவுக்கு ஏதாவது உதவி செய்'' என்று கத்தினர். இத்தனைக்கும் கார்த்தாலே அஞ்சு மணிக்கே எழுந்திருந்து பாதி சமையல் வேலையை நான்தான்

**-நித்யா சங்கர்-**

செய்யறேன். ராத்திரியும் சமையலில் பாதி வேலையை நான்தான் செய்யறேன். அப்படியிருந்தும் இப்படியொரு பெயரா எனக்கு'' என்றுள் கோபமும் அழுகையும் ஒருசேர.

"ராதா.... அப்பா உன்னை இடித்துக் காட்டத்தான் அப்படிச் சொன்னார்னு ஏன் நினைக்கிறே? என் தம்பியும் கொஞ்சம் வேலைகளைச் செய்யட்டுமேன்னு அவர் சொல்லியிருந்தா?''

"அதுதானே பார்த்தேன். ஏன் உங்கப்பாவுக்கு நீங்க வக்காலத்து வாங்கலேன்னு... உங்கப்பா குணம் உங்களை விட எனக்கு நல்லாத் தெரியும். அவர் என்னைத்தான் மீன் பண்ணியிருக்கார். இங்கே பாருங்க.... எனக்கு ரெண்டுலே ஒண்ணு தெரிஞ்சாகணும். நீங்க உங்கப்பா கிட்டே இதைப் பத்திப் பேசி நியாயம் கேட்கப் போறீங்களா இல்லையா? இல்லேன்ன ஒரு நாள் நானே வெடிச்சுக் கன்னபின்னன்னு கேட்டுடுவேன்.''

"ராதா.... ப்ளீஸ் ஸ்டாப் இட். இதுக்கு ஏதாவது முடிவு கண்டு பிடிப்போம்.''

"ராதா..... ராதா.....'' என்று கூப்பிட்டுக் கொண்டே வீட்டுக்குள்ளே நுழைந்தான் கார்த்திக்.

அவன் தந்தை ஹாலில் சோபாவில் அமர்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்தார். தம்பி ரவியைக் காணவில்லை. அம்மா சமையலறையில் வேலையாயிருந்தாள்.

சோர்வோடு பெருமூச்சு விட்டபடியே தந்தையின் பக்கத்தில் சோபாவில் அமர்ந்தான்.

"என்ன புத்தகம் படிக்கிறீங்கப்பா?''

"ஜே. கே.''

'எப்போதும் புத்தகமும் கையுமாய் இருக்கும் தந்தைக்கு. அதுவும் எப்படிப்பட்ட புத்



# மருமகள் என்பவள் மெஷின் இல்லை

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நாம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

தகங்கள் பெரிய, பெரிய அறிஞர்கள் எழுதிய பிலாஸபி, ஸைகாலஜி, ஸயன்ஸ் புத்தகங்கள் — இந்தச் சிறிய நுண்ணிய உணர்வுகளைப் புரிந்துகொள்ள முடிவதில்லையே? ஒருவேளை, அது படித்து வருவதல்லவோ? அனுபவத்தால் வருகிறதோ?' என்று மனதுக்குள் வியந்தான் கார்த்திக்.

மகனின் பேச்சுக் குரல் கேட்டு அவசர அவசரமாகக் காபி கலந்து கொண்டு வந்து கொடுத்தாள் மங்களம்.

''அம்மா.... ஏன் இன்னும் ராதா வரவில்லை?''

''அவ வர டைம்தான். நீதான் இன்னிக்கு கொஞ்சம் முன்னதா வந்துட்டே. ஏன் சீக்கிரம் வேலை முடிஞ்சிடுத்தா?'' என்றாள் மங்களம் ஆதுரத்துடன்.

''இல்லே. இன்னிக்கு நான் பஸ்லே வரலே. எங்க மானேஜிங் டைரக்டர் இந்தப் பக்கமா வந்தார். நானும் அவருடன் காரில் வந்து, இங்கே பக்கத்திலே இறங்கிண்டுட்டேன். ஆமா.... முந்தா நாள் என்ன ஆச்சு? அப்பா ரவியை என்னமோ திட்டினாராமே?'' என்று மெதுவாக ஆரம்பித்தான் கார்த்திக்.

''ஆமாண்டா. அம்மாவுக்கு நாளுக்கு நாள் உடம்பு மெலிந்து கொண்டே போறது. உடம்பிலே சக்தியே இல்லே. அதனாலேதான் ரவிகிட்டே அன்னிக்குச் சத்தம் போட்டேன். அவன்தான் கொஞ்சம் கூடமாட ஒத்தாசை செய்யக் கூடாதோ?'' என்றார் ராமநாதன்.

''ஏம்பா.... அதை அவனைத் தனியாகக் கூப்பிட்டுச் சொல்லக் கூடாதோ? ராதா தன்னைத்தான் இடித்துக் காட்டறீங்களோன்னு ரொம்ப வருத்தப்பட்டுண்டா.''

''அட, நான் அவளைச் சொல்லலேயடா. அவ ஏண்டா வருத்தப்படணும்? நான் ரவியையில்லே சொன்னேன்!''

''அப்பா.... இந்த மாதிரி விஷயங்கள் எப்படி எப்படி எடுத்துக் கொள்ளப்படும்னு நம்மால் சொல்ல முடியாதுப்பா. நாம கொஞ்சம் ஜாக்கிரதையாத்தான் இருக்கணும்.''

''ஒவ்வொரு விஷயமும் மேஷம், ரிஷபம் ராசி பார்த்தா சொல்ல முடியும்? செய்ய முடியும்? அப்படியிருந்தா மனுஷன் சுதந்திரமா ஒண்ணுமே பேச முடியாது; செய்ய முடியாது. நான் சொன்னது ரவியைத்தான். நீ அவகிட்ட கிளியரா சொல்லிடு'' என்றார் ராமநாதன்.

''சரி'' என்று, யோசித்தபடியே தன்னுடைய ரூமிற்கு எழுந்து நடந்தான் கார்த்திக்.

''ஆமா.... கார்த்திக் சொல்றது வாஸ்தவம்தானே. அவ பாவம், அவளைச் சொன்னீங்களோன்னு நினைச்சிட்டிருந்தாளோ என்னவோ? ஏன் மத்தவங்க மனசு நோகற மாதிரி இப்படிப் பேசறீங்க?'' என்றாள் மங்களம் ராமநாதனிடம்.

கார்த்திக்கிற்கு தான் பேசுவது கேட்காது என்று நினைத்து அந்தப் பேச்சைத் தொடர்ந்தாளோ அல்லது கேட்டால் கேட்கட்டுமே என்று நினைத்தாளோ? அவர்கள் சிறிது உரக்கவே பேசிக் கொண்டதால் தன் ரூமில் டிரஸ் மாற்றிக் கொண்டிருந்த கார்த்திக்

## புயலில் ஓர் அனுபவம்



**போட்டி: 32**

சமீபத்தில் வீசிய புயலின்போது, அடை மழை—வெள்ளத்தின் போது உங்களுக்கு ஏற்பட்ட ஒரு 'த்ரில்'லான அனுபவம், அல்லது வீட்டுக்குள் அடைந்து கிடந்தபோது செய்த பயனுள்ள காரியம், பிறருக்கு உதவ முடிந்த மனநிறைவான நிகழ்ச்சி...: இப்படி ஏதேனும் ஓர் அம்சம் (கருத்து: எஸ்.வி. ராஜசேகர், சென்னை—5) பற்றி மேலுள்ள வெற்றிடத்தில் எழுதி, இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து எங்களுக்கு அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி.ஐ.பி. ஸூட்கேஸ். உறையின் மீது 'புயலில் ஓர் அனுபவம்' என்று குறிப்பிடுதல் அவசியம்.

**முடிவு தேதி: 23.12.85**

**வாரம் தவறாமல் போட்டியில் பங்கு பெற்றால் இன்னும் உங்களுக்காகக் காத்திருக்கும் 21 வி.ஐ.பி. ஸூட்கேஸ்களில் ஒன்று உங்கள் வசப்படாதா என்ன?**

என் பெயர்: ......................................................

விலாசம்: ......................................................

......................................................

**வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்**

# "அது அவுட் இல்லையா? என்ன, விளையாடறீங்களா?"

கிரிக்கெட் விளையாட்டை டிவியில் பார்ப்பது என்பது இவருக்கு வெகு குஷியான பொழுதுபோக்கு. அதுவும் தன் அணி ஜெயிக்கும்போலிருந்தால் இவருக்கு தலைகால் புரியாது! தானே மைதானத்தில் விளையாட்டைப் பார்ப்பது போல அமர்க்களப்படுத்தி விடுவார். அம்பயர் ஏதாவது தவறான முடிவெடுத்தால் பொத்துக்கொண்டு கோபம் வரும் இவருக்கு!

அதுவே ஸியர்ஸ் கலர் டிவி செய்யும் மாயம்!

கண்ணெதிரேயே நடைபெறுவது போன்ற தத்ரூபமான காட்சிகள். கண் கவரும், இயற்கையான வண்ணங்கள்.

ஒலியோ ஒரு அபாரமான அனுபவம். ஸியர்ஸ் டிவியில் கேட்கும் குரலுக்கு பதில் சொல்லவோ, விளையாட்டு நிகழ்ச்சிகளின்போது உற்சாகக் குரல் எழுப்பவோ தூண்டும் துல்லியம்!

ஸியர்ஸ் டிவி மிகச்சிறந்த அயல்நாட்டு டிவி தொழில்நுட்பத்தோடு தயாரிக்கப் படுகிறது.

மேலும், ஒவ்வொரு தயாரிப்பு நிலையிலும் ஸியர்ஸ் டிவி கடுமையான தரக் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தப் படுகிறது.

இந்த உயர்தரம்தான் ஸியர்ஸ் கலர் டிவியில் நீங்கள் நிகழ்ச்சிகளைக் காணும்போது அவை நேரில் நடைபெறும் நிஜக்காட்சிகளைப் போலவே தோன்ற வைக்கிறது.

தத்ரூபமான வண்ண ஒளியும், செவிக்கினிய ஒலியும் ஒருங்கே இணைந்தது ஸியர்ஸ் கலர் டிவி.

காத்திருப்பானேன்?

ஸியர்ஸ் டிவியை இன்றே கண்டு, கேட்டு அந்த சுகானுபவத்தைப் பெறுங்கள்!

**ஸியர்ஸ் டிவியில் எது நிகழ்ந்தாலும் அதோடு மெய்மறந்து ஒன்றிடுவீர்!**

**SEARS ELCOT**

123, A/3 லாட்டிஸ் பிரிட்ஜ் சாலை
திருவான்மியூர், சென்னை-600 041.

Sista's. ST. 359.85 TM B

கிற்கு அவர்கள் பேசுவது தெளிவாகக் கேட்டது.

''இதோ பார் மங்களம். நான் பொதுவாக எல்லோருக்குமாகத்தான் சொன்னேன்; அதாவது ராதாவையும் சேர்த்து. கார்த்திக் மனசு வருத்தப்படுவானேன்னு தான் அவனிடம் உண்மையைச் சொல்லலே. நாள் பூரா கஷ்டப்பட்டு வேலே செஞ்சு ராத்திரி பூரா உடம்பு வலியால நீ படற வேதனே எனக்குத்தானே தெரியும்.''

''அய்யய்யோ.... அந்தப் பெண்ணே அப்படிச் சொல்றது மகா பாவம். வேலைக்குப் போய்ட்டு வர்ற பெண். அவளால் முடிஞ்ச ஒத்தாசையைச் செய்துண்டுதான் இருக்கா. இப்படி வீட்டுக்கு வந்த பெண்ணே கரிச்சு கொட்டினு நமக்கு மகா பாவம் வரும்.''

''ஆமாமா.... உன் நாட்டுப் பெண் மட்டும்தான் வேலைக்குப் போருளோ? எத்தனே வீடுகளில் பெண்கள் வேலைக்கும் போய்ண்டு, வீட்டு வேலையும் செஞ்சுக்கிரு. நாம இப்படி அடிக்கடி ஜாடைமாடையாச் சொல்ல வேண்ணு உன்னைச் சமையல்க்காரியாக்கிட்டு ஹாயா இருந்துடும் இந்தக் காலத்துப் பெண்கள்!'' என்று ஒரு லெக்சரே கொடுத்தார் ராமனுதன்.

துணுக்குற்ருன் கார்த்திக். அப்பா என்ன பசுத்தோல் போர்த்திய புலியா?

ஒரு முடிவுக்கு வந்தவன், ராதாவிற்காகக் காத்திருந்தான்.

அடுத்த நாள் மாலே நேரம். ராமனுதன் அவர் வழக்கப்படி ஏதோ ஒரு புத்தகத்தில் மூழ்கியிருந்தார். கார்த்திக் பேப்பர் படித்துக் கொண்டிருந்தான். சேகரும் ரவியும் ரேடியோவில் பாட்டுக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். மங்களமும் ராதாவும் சமையலறையில் இருந்தார்கள்.

ஏதோ வேலையாக ஹாலுக்கு வந்த ராதா, காபி குடித்த டம்ளர்கள் அப்படியப்படியே அங்கங்கே வைத்திருப்பதைக் கண்டு வெகுண்டாள். காபி குடித்ததும் அந்த டம்ளர்களைத் தேய்க்க வைக்கக் கூடவா முடியாது இவர்களுக்கு?

''சேகர்'' என்று அவள் போட்ட இரைச்சல் கார்த்திக் உட்பட எல்லோரையும் திடுக்கிட வைத்தது.

''ஏண்டா.... காபி குடிச்சேயில்லே. அந்த டம்ளரை தேய்க்கறதுக்கு சமையலறையிலுள்ள ஸிங்கில் கொண்டு போய்ப் போடக் கூடாதா? சாப்பிட்டுச் சாப்பிட்டு உட்கார்ந்துண்டிருக்கியே....? இந்த வேலே கூடவா செய்ய முடியாமப் போச்சு உனக்கு?'' என்று சேகரை தரதரவென்று இழுத்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

புயல் வந்து போனது போன்ற அமைதி அந்த ஹாலில்.

என்ன வந்தது ராதாவிற்கு? இதுவரை அவள் அப்படிச் சத்தம் போட்டதேயில்லேயே? அதுவும்..... இன்று மாமனுருக்கு எதிரில்.....

சுய உணர்வு வருவதற்குச் சில நிமிடங்கள் ஆயிற்று ராமனுதனுக்கு. சிறிது கோபமும், சிறிது குழப்பமும் கூட. ''டேய்....டேய்.... பார்த்தியாடா.... என்ன சொல்லிட்டுப் போரு? 'சாப்பிட்டு சாப்பிட்டு உட்கார்ந்துண்டிருக்கியே.' நான் ரிடையராகி, ஒரு வருமானமும் இல்லாம, சாப்பிட்டுட்டு உட்கார்ந்துண்டிருக்கேன் பார், என்னைத்தாண்டா சொல்லாம சொல்ரு அவ. என்ன தைரியம் இருந்தா இப்படி என் முன்னுலேயே சொல்வா அவ?'' என்று இரைந்தார்.

''என்னப்பா இது? நானும்தான் இங்கே இருந்தேனே. அவ சேகரையில்லே சொன்னு. அவனே வேறு தரதரவென்று இழுத்துட்டுப் போயிருக்கா. குழந்தைகளுக்குப் பெற்ருேர்கள் தானேப்பா சொல்லித் தரணும். நீங்க சும்மா எதையும், எதையுமோ கனெக்ட் பண்ணிக்கிட்டு! அன்னிக்கு நீங்க ரவியைத் திட்டலியா..... அது மாதிரிதானே இதுவும்!'' என்று இரைந்தபடியே எழுந்தான் கார்த்திக்.




"சார், உங்களை ஹெட் மாஸ்டர் கூப்பிடறார்!" என்றவாறே பியூன் காளியப்பன் வந்து நின்றபோது, எல்லா ஆசிரியர்களின் பார்வையும் ஆசிரியர் சற்குணத்தின் மேல் பதிந்தது.

சற்குணம் அதை எதிர்பார்த்தவர் மாதிரி வேகமாக எழுந்தார். திருத்திக்கொண்டிருந்த கட்டுரைகளை ஓரங் கட்டி, நுனி வேட்டியை வலது கையால் பிடித்தவாறே நடக்க ஆரம்பித்தார்.

சற்குணம் அந்தப் பள்ளியில் இடைநிலை ஆசிரியர்: குள்ளமான உருவம். மெலிந்த தோற்றம். மொட்டை அடித்துச் சில நாள் ஆன மாதிரி தலை. கதர் வேட்டியைக் கணுக்கால் வரை கட்டி, மேலே கதர் சர்ட் போட்டிருந்தால் அவர் சற்குணம்!

நெற்றியில் விபூதியும், சட்டையில் மூன்று பேனாவும் நிரந்தரம்!

தலைமை ஆசிரியரின் அறையை நோக்கி நடந்தவாறே, கொஞ்சம் பழைய நினைவுகளை அசை போட்டார் சற்குணம்.

படிப்பு இரண்டாம் பட்சம். ஒழுக்கம்தான் முதல் பாடம் என்று ஒவ்வொரு அணுவுக்குள்ளும் நினைக்கும் அந்த ஆசிரியரின் மனம் அன்று சலித்துப் போயிருந்தது.

இரண்டு வருஷங்களுக்கு முன்பு.

ஏழாம் வகுப்பு மாணவன் ஜெகதீசன் அவருக்கு முன்னால் வந்து நின்று தலையைச் சொறிந்தான்.

"என்ன ஜெகதீஷ்?"

"சார், விளையாட்டுப் போட்டியிலே கலந்திட்டதாலே, லேட் ஆயிடுச்சு. ஸ்கூல் பஸ் போயிடுச்சு. டவுன் பஸ்லேதான் போகணும்....."

"பணம் இல்லையா?"

ஜெகதீசன் தலையை ஆட்டினான். "ஒரு ரூபாய் கொடுங்க சார். நாளைக்கு எங்க அப்பா கிட்ட வாங்கிட்டு வந்து தந்திடறேன்!"

சற்குணம் பர்ஸை எடுத்துத் தேடிய போது, ஒரு ரூபாய் நோட்டு இல்லை.

"சரி இந்தா இரண்டு ரூபாய்!"

ஜெகதீசன் பல்லெல்லாம் தெரிய வாங்கிக் கொண்டு போனான்.

ஒரு வருஷம் போயிருக்கும். ஒரு நாள் பாத்ரூமுக்குப் போய்க் கொண்டிருந்த ஜெகதீஷ், சற்குணத்தின் கண்களில் பட, மறந்து போயிருந்த இரண்டு ரூபாய் சட்டென நினைவுக்கு வந்தது.

அட, இவன் திருப்பித் தரவே இல்லையே?

ஜெகதீஷ் அவருடைய வகுப்பு மாணவன் இல்லையென்றாலும், அவன் கொழுப்பெடுத்த சாராயப் பணக்காரன் ஒருவனின் மகன் என்று அவருக்குத் தெரியும்.

ஊரில் எல்லோரிடமும் கடன் வாங்கி ஏப்பம் விடும் அப்பனின் மகனை அப்படியே விட அவருக்கு மனம் வரவில்லை.

## மலர்வண்ணன்



கூப்பிட்டார்.

"என்ன ஜெகதீஷ்? இரண்டு ரூபாய் வாங்கினியே, என்ன ஆச்சு?"

"அது நான் இல்லே சார்!"

சற்குணம் கொஞ்சம் குழம்பினார். 'இவன் தானே, வாங்கினான்?'

"பின்னே யார்?"

"நைன்த்லே ஒருத்தன் சார்."

"சரி, அவனை வந்து என்னைப் பார்க்கச் சொல்!"

இவரைப் பார்க்க யாரும் வரவில்லை. மூன்று மாதத்திற்குப் பிறகு ஜெகதீஷைப் பார்த்தபோது மறுபடியும் அந்த ஞாபகம் வந்து தொலைத்தது.

"அவன்கிட்டச் சொன்னேன் சார். உங்களை வந்து பார்க்கிறதாச் சொன்னானே!"

"இன்னைக்கு மத்தியானம் நான் லீவ். நாளைக்குக் காலைலே வரச் சொல்!"

பணம் கொடுத்து ஒருவழியாக இரண்டு வருஷம் ஆனபோது, ஜெகதீஷ் ஒன்பதாம் வகுப்பில் இருந்தான்.

சற்குணம் தற்செயலாக விசாரித்தவர், இந்த விஷயத்தில் தீவிரம் காட்ட ஆரம்பித்தார்.

ஒரு வருஷம் நினைவே இல்லை. ஒரு வருஷம் கூப்பிட்டுச் சொல்லியும் பதில் இல்லை.

அவனை ஆள் விட்டு, வகுப்பில் இருந்து கூப்பிட்டார்.

"உண்மையைச் சொல். நீதானே பணம் வாங்கினே?"

"ஆமாம் சார்."

"ராஸ்கல்."

ஆத்திரம் அதிகமாய்ப் போன சற்குணம் அவன் கன்னத்தில் பளீர் என்று அறைந்தார்.

"நாளைக்குக் காலையிலே உங்க அப்பாவை வந்து பார்க்கச் சொல்!"

..... இதோ இவன் அப்பா வந்திருக்கிறார். தலைமை ஆசிரியர் அறையில் இருக்கிறார். இவர் போய்க் கொண்டிருக்கிறார்.

ஒரு குற்றவாளியின் மனநிலை தன்னை எப்படியோ பீடித்திருப்பதை ஆசிரியர் சற்குணம் அறிந்து புரியாமல் திகைத்தார்.

காரணம்?

அன்று காலை சக ஆசிரியர் டேவிட்டிடம் ஜெகதீஷ் விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந்தார் சற்குணம்.

மூன்றாவது பீரியடின் போது, ஜெகதீஷின் தந்தையும் டேவிட்டும் வெராண்டாவில் பேசிக்கொண்டிருப்பதைக்கண்ட சற்குணம், அவர்களிடம் போனார்.

"சார் நீங்க ஜெகதீஷின் அப்பாதானே?" தான் வரச் சொல்லித்தான் வந்திருக்கிறார் என்ற நினைப்பில் இவர் கேட்க, அவர் தலை திருப்பிக் கொண்டார்.

"டேவிட் சார்! இன்னைக்குக் காலையிலே சொன்னேனே, ரெண்டு ரூபாய் விஷயம்."

"இரண்டு ரூபாய் விஷயமா? என் கிட்ட

சொல்லலியே?''

சற்குணம் இருண்டு போனார்.

டேவிட், பையன்களின் பணக்கார அப்பாக்களுக்கு ரொம்ப வேண்டியவர். காரியவாதி. இதையெல்லாம் காட்டிக் கொள்வாரோ?

ஜெகதீஷின் அப்பா தன்னிடம் ஏதாவது விசாரிப்பார் என்று எதிர்பார்த்தார் சற்குணம். அவர் இவரைக் கண்டுகொள்ளாமல் டேவிட்டிடம் பேசிக் கொண்டிருக்கவே, சூடானார்.

எதுவும் பேசாமல் நகர்ந்தவர், எரிச்சலோடு வகுப்பறைக்குள் போய்விட்டார்....

சற்குணம் தலைமை ஆசிரியரின் அறைக்குள் நுழைந்த போது, அந்தச் சாராயப் பணக்காரன், கால் மேல் கால் போட்டுக் கொண்டு, ஏறத்தாழப் படுத்துக் கொண்டிருந்தான்.

ஹெட் மாஸ்டர் முகத்தைத் திருப்பிக் கொள்ள, இவர் பவ்யமாய் நின்றார்.

சட்டென்று எழுந்த சாராய வியாபாரி, ஒரு இரண்டு ரூபாய் — புது நோட்டை சரேலென உருவி, டேபின் மேல் வீசி எறிந்தான்.

''இங்கே பாருங்க சார். எனக்கு இருக்கிறது ஒரே பையன். இரண்டு கோடி வெச்சிருக்கேன். இந்தமாதிரிபரதேசிகள், கேவலம் ஒரு இரண்டு ரூபாய்க்காக, என் பையனை எப்படி அடிக்கலாம்? பொறுக்கிக்கச் சொல்லுங்க அவன் பணத்தை!''

சற்குணத்தின் ரத்தம் கொதித்தது.

''இங்கே பாருங்க சற்குணம். ஆஸ் எ ஹெட்மாஸ்டர், நீங்க செஞ்ச காரியத்தை என்னாலே ஒப்புக் கொள்ளவே முடியலே. கேவலம் ஒரு இரண்டு ரூபாய்க்காக, ஒரு பையனை நீங்க அடிச்சது ரொம்பத் தப்பு; நான் கூட எத்தனையோ பையன்களுக்கு...''

தலைமை ஆசிரியரின் சுயபுராணத்தை சற்குணம் கேட்க விரும்பவில்லை. காதுகளை மந்தப்படுத்தி, நினைவை மடை மாற்றினார்.

''என் பையனை நான் கூடக் கைதொட்டு அடிச்சதில்லே சார்!''

ஒரு நிமிஷ நேரம் சற்குணம் பேசவில்லே. பிறகு சொன்னார்.

''சார், இதைப் பத்திப் பேசறதுக்காகத்தான், நான் இவரை வரச் சொன்னேன். ஆனா இவர் நானா அறிமுகம் பண்ணியும் என்னைக் கண்டுக்காமல்.....''

''ஆமா, நீயெல்லாம் சரி மனுஷன் பாரு. உன்னைக் கண்டுக்க! என் வீட்டு வேலைக்காரனுக்கு உன்னை விடச் சம்பளம் அதிகம், தெரியுமா?''

சற்குணம் உஷ்ணமானார்.

''இங்க பாருங்க ஹெச்.எம்.! எனக்கு நிறையவேலை இருக்கு. இந்த இரண்டுரூபாயை விட்டெறிஞ்சாச்சு. பணத்தை எடுத்திட்டு, என்கிட்ட மன்னிப்புக் கேட்கச் சொல்லுங்க!''

தலைமை ஆசிரியர் கொஞ்சம் சங்கடமாக நெளிந்தார்.

''நான் மன்னிப்புக் கேட்கணுமா, எதற்கு?''

''இரண்டு ரூபாய்க்காக, ஒரு பையனை அடிச்சியே, அதுக்காக!''

''அப்போ, பணத்துக்காகத்தான், நான் உங்கபையனை அடிச்சேன், அப்படித்தானே?''

''பின்னே, கொஞ்சறத்துக்கு அடிச்சியா?''

சற்குணம் தலைமை ஆசிரியரிடம் பேசினார்.

''சார், இன்றைக்கு விட்டுப் போன படிப்பை நாளைக்குப் படிச்சிடலாம். ஆனால் ஒழுக்கம்? ஏழாம் வகுப்புப் படிக்கிற மாணவன், தன்னோட ஆசிரியர் கிட்ட இரண்டு ரூபாய் கடன் வாங்கிட்டு, ஏமாற்றியிருக்கான். இங்கே எத்தனை ரூபாய் என்கிறது பெரிசு இல்லே. ஆசிரியர் கேட்க மாட்டார் என்றோ.... மறந்துவிட்டார் என்றோ நினைக்கிறான். ஏழாம் வகுப்பு படிக்கிறப்போ, ஒரு ஆசிரியரையே ஏமாத்தறவன், பெரியவன் ஆனா எப்படிப்பட்ட கிரிமினல் ஆவான்? நீங்க பார்த்தது இரண்டு ரூபாய்! நான் பார்த்தது ஏமாற்றுகிற ஒழுங்கீனம்! நான் தண்டிச்சது பணத்துக்காக இல்லே. ஒழுங்கீனத்துக்காக! நாலஞ்சு தடவை கூப்பிட்டுக் கேட்டேன். முதல்லே நான் இல்லேன்னான். வந்து பாருன்னேன். பாக்கவே இல்லே. அதுக்காகத்தான் தண்டிச்சேன். பத்து வயசிலே மனம் கெட்டுப் போனா, முப்பது வயசிலே மானம் கெட்டுப் போகும். என்னோட மாணவன் கெட்டுப் போகக் கூடாது என்கிறதுக்காக... இரண்டு வருஷ விசாரணைக்குப் பிறகு, தண்டிச்சேன்.....''

தலைமை ஆசிரியர் தலைகுனிந்து வருத்தப்பட, சாராய வியாபாரி தலை நிமிர்ந்து இவரையே பார்த்தான்.

''பெரிய ஒழுக்க சீலர். திருத்த வந்திட்டீங்களா? நான் யார் தெரியுமா? சாராய வியாபாரி. ஒழுக்கமா இருந்தா ஒரு பைசா வராது. பேசாமல், கேள்வி பதில் சொல்லி, பரீட்சையிலே பையனை பாஸ் பண்ண வைப்பியா? அத விட்டுட்டு இந்த வேலே எதுக்கய்யா, உனக்கு? இந்த ஸ்கூல் கமிட்டியிலே நானும் மெம்பர் தெரியுமில்லே?''

''நேத்துத்தான் தெரிஞ்சிட்டேன். குழந்தைகளுக்கு ஒழுக்கத்தைப் போதிக்க வேண்டாம்! பரீட்சைக்குத் தயார் பண்ணு! இது தான் ஆசிரியர் தொழில்னா அந்தத் தொழிலே வேண்டாம். மனம் கெட்டுப் போகுமே என்கிற தூய்மையான நோக்கத்தைக் கொச்சைப் படுத்திக் காசுக்காகவே எதையும் பார்க்கற உங்க மாதிரி ஈனர்களுக்காக, ஆசிரியர் வேஷம்போடணும்னா அந்தவேலையே வேண்டாம். இதோ, மூணு மாச நோட்டீஸ்.''

பாக்கெட்டில் தயாராக எழுதி வைத்திருந்த விலகல் அறிவிப்பை சாராய வியாபாரியின் முகத்தில் வீசிவிட்டு, சற்குணம் வெளியேறினார்.

தலைமை ஆசிரியர் ரகசியமாகக் கண்ணீர் சிந்த, சாராய வியாபாரி வெற்றிப் புன்னகையோடு மீசையை முறுக்க ஆரம்பித்தான்.

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!

கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.

இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!





**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!




இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

## Godrej பவுடர் ஹேர்-டை கான்ஸென்ட்ரேட்

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

# உணர்வுகள் உறங்குவதில்லை

## 19. கண்டனக் கூட்டம்

சந்திரசூடன் உள்ளூரப் பரபரப்படைந்திருந்தார். கோயிலில் சக்தி சிவத்தின் திருமணத்தைப் பற்றிக் கேட்டுக் கொண்டிருந்த போது, அவருடைய செவிகளில் எங்கிருந்தோ நாதஸ்வர இசையும், சங்கொலியும், மந்திர ஒலிகளும் கேட்பது போலிருந்தன. இரண்டு, மூன்று முறை திகைத்துப் போய்த் திரும்பிக் கோயிலைச் சுற்றுமுற்றும் பார்த்து ஏமாந்தார். தம்மைச் சுற்றி ஓம குண்டப் புகையின் நெடியும், மலர்களின் வாசனையும் பரவியதைக்கூட உணர்ந்தார். ஆனால் கோயிலில் அப்போது அவர்கள் மூன்று பேரைத் தவிர வேறு யாருமே இல்லையே?

கோயிலில் பெற்ற அனுபவத்தை நினைத்துத் தாளாத வியப்பில் ஆழ்ந்திருந்தார். வெற்றிலைச் செல்லத்தை எடுத்து வெற்றிலை போடத் துவங்கினார். மனம் பரபரத்துக் கொண்டிருந்தது.

சக்திசிவத்தின் சித்து சக்தி, ஒருவேளை தம்மைப் பரவசப்படுத்தி அவரோடு ஈர்த்துக் கொண்டதோ?

சந்திரசூடன் வெற்றிலைச் சாற்றைத் துப்புவதற்காக எழுந்தபோது பார்வதி நோட்டுப் புத்தகங்களையும், காகிதங்களையும் ஏந்தியவாறு உள்ளே வந்தாள். அவள் கொடுத்ததை வாங்கி மேஜை மீது போட்டுவிட்டு, குளியலறைக்குச் சென்று வாயைக் கொப்பளித்துவிட்டு வந்தார். கட்டிலில் ஏறிச் சம்மணம் போட்டு அமர்ந்து கொண்டார்.

''உட்காரேன்'' என்றார்.

பார்வதி ஒரு சிறு அட்டை டப்பியை அவரிடம் நீட்டியபடியே சோபாவில் அமர்ந்தாள்.

''என்னது?'' என்று கேட்டவாறே அதை வாங்கினார் சந்திரசூடன்.

''என் வைரத் தோடுகள்... விற்றுத் தர முடியுமா?'' என்றாள் பார்வதி.

அப்போதுதான் நினைவு வந்தவராய் அவள் முகத்தை உற்றுப் பார்த்தார். அவளுடைய காதுகளில் வழக்கமாக அலங்கரித்த வைரத் தோடுகள் இல்லை.

''ஏன் கழற்றிவிட்டாய்? இதை விற்பதற்கு என்ன அவசரம்?''

''வைரத்தோடு போடுவது நல்லதில்லை.''

''ஏன்?''

''பரணி வீட்டுப் பாட்டி சொன்னாள்'' என்று கூறிவிட்டுத் தலையைக் குனிந்துகொண்டாள் பார்வதி.

சந்திரசூடன் கோபத்துடன் சொன்னார். ''பாட்டி சொன்னாள், பூட்டி சொன்னாள் என்று உடனே கழற்றிவிடுவதா? நமக்கும் அறிவு உண்டே.''

பார்வதி அவரை நிமிர்ந்து பார்த்தாள்.

''நான்.... நான்....'' — மேற்கொண்டு பேச வராமல் திணறினாள். உதடுகள் துடித்தன.

அவளைப் பரிவுடன் பார்த்தவாறு சந்திரசூடன், ''நீ என்ன சொல்லவருகிறாய் என்பது புரிகிறது. வாழ்க்கையில் நிகழ்ந்த விபத்தை ஆயுள் பூராவும் மனத்தில் இருத்தி வைத்துக் கொண்டா இருக்க வேண்டும்? நான் முன்பே ஒருமுறை உன்னிடம் சொல்லியிருக்கிறேன், இதெல்லாம் ஒரு விபத்து என்று. பழைய விபத்துக்களை இப்படி யாராவது நினைவூட்டிக் கிளறிவிடுவதுண்டு. இதையெல்லாம் கண்டு கொள்ளவே கூடாது. வாழ்க்கையில் பல விபத்துக்கள் ஏற்படும். அவற்றையெல்லாம் மறந்துவிட வேண்டும். தோடுகளைக் காதில் அணிந்து கொள். உன் முகத்திற்கு எடுப்பாக இருக்கும்'' என்றார். வைரத் தோடிருந்த டப்பியை அவளிடம் நீட்டினார்.

''விற்று விடலாம்'' என்றாள் பார்வதி.

''கூடாது. எதற்காக விற்க வேண்டும்? பாட்டி ஏதோ உளறினாள் என்பதற்காகவா?''

பார்வதி அதை வாங்கத் தயங்கினாள்.

''உனக்குப் பாட்டி மீது மதிப்பா என் மீது மதிப்பா?'' என்று சந்திரசூடன் கேட்டதும், பரபரப்படைந்தவளாய் டப்பியை வாங்கிக் கொண்டாள்.

''அணிந்து கொள்'' என்றார்.

''பத்திரமாக இருக்கட்டும். சாரதாவிற்குப் பிற்பாடு உதவும்.''

''இப்போது உனக்கு உதவட்டும். அணிந்து கொள்.''

''அப்புறம் அணிந்து கொள்கிறேன்.''

''அடுத்தமுறை என்னைச் சந்திக்கும்போது நீ அணிந்திருக்க வேண்டும். இல்லையென்றால் உன்னோடு எனக்குச் சண்டைதான்'' என்றார் சந்திரசூடன்.

பார்வதி சிரித்தாள். அவளுடைய கன்னத்தில் விழுந்த குழிகளை ரசித்தார். மேஜையின்

ர. சு. நல்லபெருமாள்

மீதிருந்த நோட்டின் மீது அவர் கவனம் திரும்பியது.

''முழுவதையும் எழுதிவிட்டாயா?'' என்றார்.

பார்வதி தலையை அசைத்தாள். ''மேற்கொண்டு நீங்கள் எழுதிவிட்டீர்களா?'' என்று கேட்டாள்.

''ஊஹூம். இந்திராணியின் டைரி வேண்டும். கிடைத்த பிறகுதான் மேற்கொண்டு எழுத வேண்டும். இதுவரை எப்படி இருக்கிறது?''

''விறுவிறுப்பாக இருக்கிறது. இந்திராணி புகழேணியில் ஏறியபோது பட்ட சங்கடங்களைப் படிக்கையில் பரிதாபமாயிருக்கிறது. ஒரு பெண் அந்தத் துறையில் முன்னேற வேண்டுமானால் இப்படித்தான் போலிருக்கிறது'' என்றாள் பார்வதி.

''பெண்ணுக்கு ஒரு மாதிரியான சங்கடம். ஆணுக்கு ஒரு மாதிரியான சங்கடம். சினிமாத் துறையில், ஆண், தன்மானத்தையெல்லாம் இழந்து, பல்லைக் காட்டிக் குழைந்து முன்னேற வேண்டியிருக்கிறது. மொத்தத்தில் இருபாலரும் இழப்பது, தன்மானத்தான்'' என்றார் சந்திரசூடன்.

''அடேயப்பா, புகழ் கிட்டிய பிறகு அவர்கள் பேசும் பேச்சும், செய்யும் ஆர்ப்பாட்டங்களும்! ஏதோ மானத்திற்காகவே உயிர் வாழ்வதைப் போலல்லவா காட்டிக்கொள்கிறார்கள்!'' என்றாள் பார்வதி.

சந்திரசூடன் சிரித்தார். அவள் தொடர்ந்து சொன்னாள்:

''அவளுடைய வாழ்க்கையில் நீங்கள் வரும் கட்டம் சுவாரஸ்யமாயிருக்கிறது. ஆனால் அவள் விஷயத்தில் நீங்கள் ஏமாற்றியிருக்கிறீர்கள்.''

''ஏமாற்றியிருக்கிறேனா?'' என்று திகைப்புடன் கேட்டார் சந்திரசூடன்.

''உங்கள் மீது அவள் எவ்வளவோ அபிமானம் வைத்திருந்திருக்கிறாள். ஆனால்...'' பார்வதி மேற்கொண்டு கூறத் தயங்கினாள்.

''ஆனால்?'' — சந்திரசூடன் கேட்டார்.

''அவள் உங்களை விரும்பியிருக்கிறாள். நீங்கள் கடைசிவரை ஒதுங்கியே இருந்திருக்கிறீர்கள்.''

''நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. அவள் என்னை விரும்பவே இல்லை. அவளுக்கு நான் ஊர்வசிப் பட்டத்திற்காகச் சிபார்சு செய்ய வேண்டுமென்பதற்காக என்னை நெருங்கினாள். அவ்வளவுதான்'' என்றார்



சந்திரசூடன். ''நான் அவளுக்கு இசைந்தால் அவளுக்குக் கடமைப்பட்டவன் ஆகிவிடுவேன் என்பது அவளுடைய கணிப்பு. அவள் யாரையுமே காதலிக்கவில்லை. காதலிக்க அவளுக்கு நேரம் கூட இல்லையே. அவள் தன்னுடைய உடலைத்தான் காதலித்தாள். தன்னுடைய கவர்ச்சியில்தான் அவளுக்கு அளவுமீறிய அக்கறை இருந்தது. உண்மையில் அவளுடைய எண்ணம், வாழ்க்கை அனைத்தையும் சினிமாத்துறைதான் ஆக்ரமித்திருந்தது. புகழின் போதையில் மயங்கிக் கிடந்தாள். ஊர்வசிப் பட்டம் கிடைக்கவில்லை என்ற ஒரு ஏமாற்றந்தான் அவளுக்கு. நான் கிடைக்கவில்லை என்பது அவளுக்கு ஓர் ஏமாற்றமல்ல'' என்றார்.

வாசற்படியருகே காலடியோசை கேட்கவே இருவரும் திரும்பிப் பார்த்தனர். பரணி சில புத்தகங்களை ஏந்தியவாறு உள்ளே வந்தான்.

''இதோ உங்கள் சிஷ்யன் வந்துவிட்டான். நான் போகிறேன்'' என்று பார்வதி எழுந்தாள்.

''இவன் காந்தியின் சீடன். எனக்குச் சீடனாக இருக்க இவன் லாயக்கில்லை'' என்றார் சந்திரசூடன்.



பார்வதி சிரித்தபடியே படியிறங்கிச் சென்றாள். அவள் சென்ற பிறகும் சந்திரசூடனின் நினைவு அவளை விட்டு விலகவில்லை. வைரத்தோட்டைக் கழற்றியது அவருடைய மனத்தில் உறுத்திக் கொண்டிருந்தது. கணவனை இழந்துவிட்டால் எந்தச் சுகமும் கூடாது என்று எண்ணும் இந்தச் சமூகத்தின் அறியாமையை நினைத்து முகத்தைச் சுளித்தார்.

எத்தனை மகாத்மாக்கள் இங்கே பிறந்துதான் என்ன? ஆயிரம் வள்ளலார்களும், விவேகானந்தர்களும் தோன்றினாலும் சரிதான் இந்தச் சமுதாயத்திற்கு விமோசனமில்லை.

''என்ன சார் யோசனை? எதை நினைத்து முகத்தைச் சுளிக்கிறீர்கள்?'' என்று பரணி கேட்டதும் சந்திரசூடன் சுயநினைவிற்கு வந்தார்.

''உன்னுடைய பாட்டியை நினைத்துத்தான். இவளை வைரத்தோடு போடக்கூடாது என்றாளாம்'' என்றார்.

''ஏன்?''

''இவள் விதவை.''

''அதனால் என்ன? விதவை என்றால் சாப்பிடாமல் பட்டினி கிடக்க வேண்டுமா என்ன? எங்கள் வீட்டுப் பாட்டி, பழைய பத்தாம் பசலி. அவளுக்கு என்ன சார் தெரியும்?''

''பாட்டிகளுக்கு நம்மைவிட எவ்வளவோ விஷயங்கள் தெரியும். ஆனால் பெண்களுக்கு இன்னொரு பெண்ணைச் சித்ரவதை செய்வதில் ஒரு மகிழ்ச்சி. அதுவும் விதவைகளைச் சீண்டுவதில் இவர்களுக்குத் தனி ரசனை. ஒரு பெண் மகிழ்ச்சியாக இருக்கிறாளே என்னும் பொறாமை'' என்றார் சந்திரசூடன். பிறகு கேட்டார். ''நீ மகாத்மா காந்தியின் கொள்கைகளைக் கடைப்பிடிப்பவன்தானே?''

''அதில் உங்களுக்கு ஏன் சந்தேகம்?''

''அப்படியானால் உன்னால் ஒரு நல்ல காரியம் செய்ய முடியுமா?''

''என்ன காரியம்?'' ஆவலுடன் பரணி கேட்டான்.

''பார்வதியைக் கல்யாணம் செய்துகொள்ளேன்.''

இதைக் கேட்டு பரணி அதிர்ந்துபோனான்.

''என்ன பதறிப் போனாய்? மகாத்மா காந்தியின் ஆன்மா மகிழ்ச்சியடையும்'' என்றார் சந்திரசூடன்.

''சார், பார்வதி அக்கா என்னைவிட மூத்தவள். ஐந்து வயது மூத்தவள்'' என்று பரணி படபடத்தான்.

''வயதில் மூத்த பெண்களை மணந்தவர்கள் நிறையப் பேர் இருந்திருக்கிறார்கள். மகா மேதைகளாகவும் இருந்திருக்கிறார்கள்.''

''நான் பிரும்மச்சாரி.''

''ஒரு பெண்ணுக்காக உன் பிரும்மச்சரிய விரதத்தை முறித்துக் கொள்ளேன்.''

''அதெப்படி சார், விரதத்திற்கு எதிராக.....?''

சந்திரசூடன் சிரித்தார். ''சரி, சரி, விரதத்தைக் கடைசி வரை காப்பாற்றினால் சரி



## ஆன்டெனாக்களால் ஆபத்து!

அமெரிக்காவில்நியூஜெர்ஸிமாநிலத்தின் வடமேற்குப் பகுதியில் வெர்னான் என்று ஒரு கிராமப்புறச் சிறு நகரம் உள்ளது. அங்கே அண்மைக் காலத்தில் குறைப் பிரசவங்களும் ஊனத்துடன் பிறந்த குழந்தைகளும் அதிக அளவில் ஏற்பட்டு வருகின்றன. இதற்கு அங்கு ஏராளமாக நிறுவப்பட்டுள்ள செயற்கைக் கோள் செய்தித் தொடர்பு ஆன்டெனாக்கள் காரணமாக இருக்கலாமோ என்று சுற்றுச் சூழல் சுகாதார அதிகாரிகள் விசாரணை செய்து வருகிறார்கள்.

இந்த ஊரில் வழக்கத்தைவிட இரண்டரை மடங்கு குழந்தைகள் கோளாறுகளுடன் பிறந்திருப்பதாகத் தெரிவிக்கிறார்கள். கடுமையான மன வளர்ச்சியின்மையை உண்டாக்கக் கூடிய மரபியல் கோளாறான டௌன்ஸ் நோய்க்குறிகள் (Downs Syndrome) கூட அதிக எண்ணிக்கையில் காணப்படுகின்றன என அவ்வதிகாரிகள் தங்கள் ஆய்வின் மூலம் தெரிவிக்கின்றனர்.

—தகவல்: எஸ். முகம்மது யூசுப்.

---

தான்'' என்றார். வெற்றிலையைத்துப்புவதற்கு எழுந்தார்.

''விவேகானந்தர் மாதிரி நைஷ்டிகப் பிரும்மச்சாரியாகவே இருக்கப் போகிறேன்'' என்றான் பரணி.

ஜன்னல் வழியாக வெளியே வெற்றிலையைத் துப்பிவிட்டுத் திரும்பிய சந்திரசூடன், ''இரு இரு உன் விரதத்தை நான் கெடுக்கவில்லை'' என்றார்.

''இன்றைக்கு மார்க்கெட் மைதானத்தில் ராமசுப்பன் பொதுக்கூட்டம் நடத்துகிறார். சக்திசிவத்தையும் உங்களையும் கண்டித்துச் சிலர் பேசப் போகிறார்களாம்'' என்றான் பரணி.

''போஸ்டர்கள் பார்த்தேனே. இதெல்லாம் ராமசுப்பனின் வேலை. அவரிடம் பணம் பெற்றுக் கொண்டு சில கைக்கூலிகள் இப்படித் திரிகிறார்கள். இந்தக் கோயிலுக்குத் தர்மகர்த்தாவாக வரமுடியவில்லை என்கிற கோபம் அவருக்கு. கடந்த ஆண்டு இந்தக் கோயிலின் முகப்பு மண்டபத்தில் சிமெண்ட் தளம் போட்டுக் கொடுத்தார். அதைப் பற்றி அங்கிருந்த கல் தூணில் செதுக்க வேண்டும் என்றார். நான் மறுத்துவிட்டேன். இந்தக் கோயிலை ஸ்தாபித்தவர்களே தங்களை விளம்பரப்படுத்தவில்லை. சிறு தளம் போட்டுவிட்டுப் பெயரைக் கல்லில் பொறிக்க வேண்டுமாம்.''

''சக்திசிவத்தின் மீது அவருக்கு என்ன கோபம்?''

''முன்பு ஒருமுறை அவர் கோயிலுக்கு வந்திருந்தபோது முன் மண்டபத்தில் அமர்ந்திருந்தார். அவர் எழுந்து போனதும், சக்திசிவம் அந்த இடத்தை நீர் தெளித்துக் கழுவச் சொன்னார். காரணம் கேட்டதற்கு, 'இன்று வெள்ளிக்கிழமை. நல்ல நாள். இந்த மாதிரி ஆசாமி இருந்த இடத்தை நீர் தெளித்துப் புனிதப்படுத்த வேண்டும்' என்றார். இந்த விஷயம் ராமசுப்பனுக்குத் தெரிந்துவிட்டது. அன்றிலிருந்து சக்திசிவத்தின் மீது அவருக்குக் கோபம்.''

''இந்தக்கோயிலுக்குப் போட்டியாக வேறு ஒரு அம்மன் கோயிலைக் கட்டப் போகிறாராம்.''

''இப்படி அவர் போட்டிக்குக் கோயிலையும் சங்கங்களையும் உண்டாக்குவதால்தானே அவருக்கு போட்டி சுப்பன் என்ற பெயரே ஏற்பட்டுவிட்டது. ஏற்கெனவே போட்டிக்கு ஒரு பிள்ளையார் கோயிலைக் கட்டினார். கையில் கறுப்புப் பணம் நிறைய இருக்கிறது. விளையாடுகிறார். அவருக்கும் பொழுது போக வேண்டுமே. நல்லவேளையாக கோயில் தானே கட்டப் போகிறார். சாராயக் கடையைக் கட்டவில்லையே?''

''கூட்டம் போடுகிறார்களே, நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?''

''ஒன்றும் செய்யப் போவதில்லை.''

''மறுப்புத் தெரிவிக்க வேண்டாமா?''

''முட்டாள்களுடன் தர்க்கம் செய்யக் கூடாது. அதுவும் பணக்கார முட்டாளிடம் பேசவே கூடாது.''

''நான் கூட்டத்திற்குப் போகப் போகிறேன்.''

''என்ன பேசுகிறார்கள் என்பதைக் கேட்டு வந்து சொல்.''

பரணி சட்டைப் பையிலிருந்து வெள்ளிப் பொம்மையை எடுத்து, ''இதை என்ன செய்வது?'' என்று கேட்டான்.

''உன் மேஜை மீது வைத்து, கிருஷ்ணனின் லீலையைப் பார்த்துக் கொண்டிரு.''

''சேச்சே, இதைப் பார்த்தால் மனம் கெட்டுவிடும். பெட்டிக்குள் வைத்துப் பூட்டிவிடப் போகிறேன்'' என்றபடியே எழுந்து வாசலை நோக்கி நடந்தான்.

''பெட்டிக்குள் பூட்டுவானேன்?'' என்று கேட்டார் சந்திரசூடன்.

''அப்போதுதான் நிம்மதியாகத் தூங்க முடியும்.''

''நீ உறங்க நினைத்தாலும் உணர்வுகள் உறங்குவதில்லை'' என்று கூறிச் சிரித்தார் சந்திரசூடன்.

பரணி, பொம்மையைப் பைக்குள் போட்டுக் கொண்டு படியிறங்கிச் சென்றான்.

(தொடரும்)



Blackbelt

# Blackbelt
## BRIEFS & BANIANS

For strong ones
who wish to remain in style and comfort.

BRIEFS



Sultan
BANIANS



BOXER
TRUNKS



FIANCEE
COMFORT BRIEFS



SAHEB
BANIANS



MARSHALL
BRIEFS



ARMS-AH-185-1

Quality Products of Aristocrat Hosiery Pvt. Ltd.
Post Box No. 3359, Bombay-400 003. Tel: 321861 • 330251





* வருந்துக்குத் தயார்

* கனெக்ஷன்

* ஏ. பிரபு சங்கர், குடியாத்தம்.

? மலிவு விலையில் வழங்கப்பட்டு வந்த இருபது கிலோ ரேஷன் அரிசி, இப்போது பன்னிரண்டு கிலோவாகக் குறைந்துவிட்டது ஏன்? விளைச்சல் குறைவினாலா?

! அகில இந்திய அளவில் பார்த்தால் நாம் தேவைக்கு அதிகமாகவே விளைவித்திருக்கிறோம். அப்படியிருந்தும் ரேஷன் அளவு குறைகிறதென்றால், அதற்கு நம் தமிழக அரசின் சில திட்டங்களும் மத்திய அரசின் சில பிடிவாதங்களும்தான் காரணம். மொத்தத்தில் அரசியல்வாதிகளின் அசட்டுத்தனங்களால் சாமானிய மக்கள் அவதிக்குள்ளாக வேண்டியிருக்கிறது.

* கே.வி. நாதன், நெய்வேலி.

? மதுராந்தகம் ஏரி முழு அளவு நீர் நிரம்பியும் இப்படி வீணாகிவிட்டதற்கு யார் பொறுப்பு?

! பொறுப்பில்லாத அதிகாரிகள்; அவர்களை வேலையில் வைத்திருக்கும் அரசு; அப்படிப்பட்டதொரு அரசைத் தேர்ந்தெடுத்த மக்கள். அனைவரும் பொறுப்பாளிகள்தாம்.

* ஹெச். கே. தாசர், தோப்புத்துறை.

? ரேகன்—கார்பச்சேவ், இருவரின் ஜெனீவா பேச்சு வார்த்தை பற்றி....?

! அவர்கள் இருவரும் இப்படி நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்ததே நம்பிக்கையூட்டும் வரலாற்று நிகழ்ச்சிதான்.

* எஸ். சந்திரசேகரன், திருச்சி—4.

? ஜாதகம், சகுனம் எல்லாம் மனிதனின் முயற்சியைக் குறைப்பதோடு, தன்னம்பிக்கையை இழக்கிற சூழ்நிலையும் உருவாகிறது என நான் நினைக்கிறேன். தராசின் தீர்ப்பு யாதோ?

! முயற்சியைக் குறைப்பது, தன்னம்பிக்கையை இழக்கச் செய்வது மட்டுமல்ல; பொன்னான நேரத்தையும் வீணடிக்கிறது என்பதையும் சேர்த்துக் கொள்ளுங்கள் தோழரே.

* மரகதம் மணாளன், ஈரோடு—9.

? 'தேச விரோத சக்திகள்' என்று ஆளுங் கட்சியினர் அடிக்கடி குறிப்பிடுவது, உண்மையில் யாரை?

! மனசாட்சியை.

* ஆர்.எச். கோபி, குடியாத்தம்.

? 'சின்ன வீடு' படத்தில் ஒருசில காட்சிகளை ஆபாசமாக எடுத்திருக்கிறாரே பாக்யராஜ்?

! இதிலென்ன ஆச்சரியம்! அவர் அப்படி எடுக்காமல் இருந்திருந்தால்தான் ஆச்சரியப்பட வேண்டும்.

* பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்—1.

? தங்களுக்குப் பிடித்த இசைக் கருவி என்னவோ?

! ஜால்ராவைத் தவிர மற்ற எல்லா இசைக் கருவிகளும் பிடிக்கும்.

* பி.டி. சண்முகராஜ், சென்னை—43.

? விபத்து ஒன்றிற்குத் தார்மீகப் பொறுப்பேற்று இமாசலப் பிரதேசப் போக்குவரத்து மந்திரி ராஜிநாமா செய்துள்ளது பற்றி...?

! சத்தியம், தருமம் ஆகியவற்றைக் கடைப்பிடிக்கும் அரசியல்வாதிகள் இன்னமும் இந்த தேசத்தில் இருக்கிறார்கள் என்று புண்பட்ட மனமெல்லாம் ஆறுதலடையும் நிகழ்ச்சி அது.

* வண்ணை கணேசன், சென்னை—11.

? நதியா, பல்லவி, நளினி — இவர்களில் அழகு, நடிப்பு, திறமை — யார் யாரிடம் என்னென்ன இருக்கிறது.

! முதலாமவரிடம்தான் மூன்றும் இருக்கிறது.

* அரு. மணிவண்ணன், சென்னை—16

? அவ்வப்பொழுதுள்ள அரசியல் சூழ்நிலைகளுக்கேற்றவாறு ஒவ்வொரு வாரமும் 'ஒளியும்—ஒலியும்' நிகழ்ச்சியில் எம்.ஜி.ஆர். படப் பாடல்களைத் தவறாமல் ஒளிபரப்புகிறார்களே.... ஒருவேளை டி.வி. நிலையத்தாருக்கும், எம்.ஜி. ஆருக்கும் ஏதாவது கனெக்ஷன் இருக்குமா?





* நம்பிக்கையூட்டும்...... ...நிகழ்ச்சி







என்ன இருக்கிறது?

! எல்லாம் அ.இ.அ.தி.மு.க.வுக்கும், இ. காங்கிரஸுக்கும் இடையிலுள்ள கனெக்‌ஷன் தான். இந்த கனெக்‌ஷன் போய்விட்டால் டீ.வி. கனெக்‌ஷனும் க்ளோஸ் ஆகிவிடும்.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? ஒவ்வொரு மனிதனின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு பெண் இருக்கிறாள் சரி! தோல்விக்குப் பின்னால்?

! சின்ன வீடு.

* ஆர். அப்துல்சலாம், திருச்சி—20.

? அண்ணாசாலையைப் போட்ட காண்ட்ராக்டர்களின் மீது தமிழக அரசு தக்க நடவடிக்கை எடுக்குமா?

! வெள்ளத்தால் சீரழிந்ததைத்தானே குறிப்பிடுகிறீர்கள்! அண்ணாசாலை மட்டுமல்ல; பெரும்பாலான சாலைகளின் கதியும் அப்படித்தான். அதற்கு காண்ட்ராக்டர்கள் மட்டுமே காரணமல்ல. ஆம்; காண்ட்ராக்ட் பெறுவதற்காக அவர்கள் அரசியல்வாதிகளுக்கு லஞ்சம் தர வேண்டியிருக்கிறது. அந்த லஞ்சப் பணத்தைப் பாக்கெட்டிலிருந்தா தர முடியும்? அதை ரோடு போடப் பயன்படுத்தும் பொருள்களின் தரத்தைக் குறைத்துத்தான் தரமுடியும். அப்படித்தான் தருகிறார்கள். அதனால்தான் காண்ட்ராக்ட் மூலம் செய்யப்படும் எதுவுமே உறுதி படைத்ததாக இருப்பதில்லை. இதைத் தட்டிக் கேட்க லஞ்சம் பெற்றுள்ள அரசியல்வாதிக்கு தார்மீக பலம் இல்லை. எனவே குற்றம் காண்ட்ராக்டர்களின் மீது மட்டும் அல்ல; அரசியல்வாதிகளின் மேலும் இருக்கிறது.

* ரேவதி ப்ரியன், ஈரோடு—1.

? அண்மையில் தங்களை நெகிழ வைத்த சம்பவம் ஒன்று சொல்லுங்களேன்!

! ஒன்றென்ன, நமது நாட்டைப் பீடித்துள்ள வறுமை, அறியாமை ஆகியவற்றுக்கு உதாரணமாக இரண்டு நிகழ்ச்சிகளைக் கூறுகிறேன்: புதிதாக நிர்மாணிக்கப்படவிருக்கும் சிமெண்ட் ஆலை ஒன்றினால் சுற்றுவட்டாரத்தில் பயிர் பாதிக்கப்படாது; அதற்கேற்ற காப்பு நடவடிக்கைகளை சிமெண்ட் ஆலை உள்ளடக்கியிருக்கிறது என்று நன்றாக விளக்கிக் கூறப்பட்டு, ஏற்றுக்கொள்ளவும் பட்ட பிறகு, அப்படி விளக்கத்தை ஏற்றுக்கொண்ட விவசாயிகளே அந்த சிமெண்ட் ஆலை முதலாளியைக் கூட்டமாகத் தாக்கிக் கொன்றது அறியாமையால் விளைந்த சோகம்; புதுக்கோட்டை பகுதியிலுள்ள இலுப்பூரில் காச நோயாளியான ஒரு தந்தை, இனி தன்னால் காப்பாற்ற முடியாத தன் மகளையே இருநூற்றைம்பது ரூபாய்க்கு ஏலம் விட்டது வறுமையினால் ஏற்பட்ட சோகம்.

* எஸ். ஆரோன் பிரபு, திருச்சி—17.

? தெலுங்கு தேசம் கட்சிக்கு நிதி போதவில்லை என்று என்.டி.ஆர். கூறியிருப்பது எதைக் காட்டுகிறது?

! அவரும் வசூலுக்குத் தயாராகிக் கொண்டிருக்கிறார் என்பதைத்தான் காட்டுகிறது.

ரூ 10 பரிசு பெறுபவர்:

* அர. மணிவண்ணன்,
25, அளகிரி நாயக்கர் தெரு,
ஆலந்தூர்,
சென்னை—16.

# தராசுக்குப் பிடித்த இசைக்கருவி என்னவோ?

"உள்ளொன்று வைப்பது: புறமொன்று

... அதனாலேதான் ராவ்

திரு கார்த்திக் சுந்தர்
12, ருக்மணி ரோடு, கலாக்ஷேத்ரா காலனி
சென்னை-600 090.

திரு நரசிம்ம ராவ்
87, IV மெயின் ரோடு, காந்திநகர்
சென்னை-600 020.




கலர் டிவி வாங்குமுன் நீங்க, சாலிடெர் வச்சிருக்கும் நண்பரைக் கேளு

# காட்டுவது"-இவை எனக்கு வேண்டாம் வாங்கின டிவியையே வாங்கினேன்.



திரு கார்த்திக் சுந்தர், சென்னையில் செஞ்சுரி ஹோல்டிங்ஸ் (பி) லிமிடெட்டின் இயக்குநர். அவர் தம் மைத்துனரும், சென்ட்ரானிக்ஸ் உரிமையாளருமான திரு நரசிம்ம ராவ் சிபாரிசு செய்த கலர் டிவியை வாங்கினார். திரு கார்த்திக் கூறுகிறார்; "பல வருஷமா நான் நிதித்துறையிலே இருக்கிறதனாலே, விலையை மட்டுமே பார்க்கிறதில்லே; தரத்தையும் பார்க்கிறேன். அதனாலே தான் கலர் டிவி வாங்க நெனைச்சபோது, எல்லாமே குழப்பமா இருந்தது. என்ன, வெவ்வேறு பெயர்லே வெவ்வேறு டிவி; ஒவ்வொண்ணும் 'சுய புராணம்' பாடினது. அதுலே சிலதுக்கு ஒரே பகட்டு. எனக்கு பகட்டை விட அதோட வேலையிலேதான் அதிக நம்பிக்கை. அதனாலே, என் மைத்துனர் ராவ் தம் டிவியை எப்படி வாங்கினார், அது எப்படி வேலை செய்யுதுன்னு கேட்டேன்

அவர் சரியான விளக்கம் தந்தார். ஒவ்வொரு டிவியையும் அவர் ஒப்பிட்டுப்பார்த்தார். அதுலே சிலது புதிசு, சிலது பிரபலமானது. இந்நிலையிலே அவருக்கு ஓரளவு தெரிஞ்சு போச்சு. முன்னணியிலே இருக்கிற இரண்டு டிவிக்களிலே ஒண்ணை வாங்க முடிவு செஞ்சி, கலர் டிவி வச்சிருக்கிற நண்பர்களோட ஆலோசனையைக் கேட்டார். ரொம்பப் பேரு சாலிடெர் டிவியை மட்டுமே சிபாரிசு செஞ்சாங்க. அதை வாங்கினதுலேருந்து எந்த பிரச்னையும் வரலலே. அதனாலேதான் என்னையும் யோசிக்காம சாலிடெர் டிவியை வாங்கச் சொன்னார். ஏற்கனவே எங்கிட்ட வேறொரு பிளாக் & ஒயிட் டிவி இருந்தும்கூட, சாலிடெரை ஏன் வாங்கினேன்னு இப்ப உங்களுக்கு தெரிஞ்சிருக்கும்."

இது உண்மையான கதை. சாலிடெரின் சிறந்த தரத்திற்கு இதுவே சான்று. சாலிடெர் மட்டுமே மக்களிடையே இத்தகைய நன்மதிப்பைப் பெற்றுள்ளது. காரணம், அது அளிக்கும் தெளிவான படம், தத்ரூபமான வண்ண ஒளிபரப்பு மற்றும் தரமுயர்ந்த தொழில் நுட்பம். எனவே இன்று மேன்மேலும் அதிக மக்கள் இதை வாங்குகின்றனர். முதன் முதலில் வாங்குவோரும், மற்ற முன்னணி பிளாக் & ஒயிட் டிவி வைத்திருப்போரும் இதையே நாடுகின்றனர். இந்த சிறப்புகள்தான் சாலிடெர் கலர் டிவியின் உண்மையான பின் பலம். சாலிடெரையே நீங்கள் தேர்ந்தெடுப்பதற்கும் சான்று.

இதன் மற்ற சிறப்பம்சங்கள்—சாலிடெர், மேற்கு ஜெர்மனி தொழில் நுட்பத்தால் உருவானது. மேற்கு ஜெர்மனியின் ITT-யிலிருந்து வரும் பிழையற்ற உறுப்புகள் கொண்டது. அதோடு, நம் நாட்டின் கடுமையான பருவநிலைகளிலும் சிறப்பாக வேலை செய்ய உருவாக்கப்பட்டது.

தவிர, சாலிடெரில் VCR, வீடியோ விளையாட்டுகள் மற்றும் ஹோம் கம்ப்யூட்டர் கனெக்ஷன் முதலான வசதிகளும் உள்ளன. இவற்றுக்கெல்லாம் சிகரமாக, சாலிடெரின் விற்பனைக்குப் பிந்தைய சேவை எல்லாப் பகுதிகளிலும் உண்டு.




**கலர் சாலிடெர்**

-தொல்லையில்லாத் தொலைக்காட்சி

Insight-DG-312

# இங்கிருந்தே ஒரு தரிசனம்!

## வேண்டாம் நிபுணர் குழு!

* தங்களின் சென்னை வெள்ளம் கட்டுரை, புகைப் படம் ஆகியவற்றைப் பார்த்திருந்தாலே போதும், மத்திய நிபுணர் குழு சென்னைக்கு வந்திருக்காமலேயே நடவடிக்கை எடுத்திருக்கலாம்!

கரூர்—1. எஸ். சிவா.

* சென்னை வெள்ளத்தில் நமது நிருபர்கள் செய்தி யையும் படங்களையும் பார்த்தபோது பாராட்டி எழுதும் படி கை எழுத வந்தபோதும் அதனுள்ளே இருக்கின்ற சோகமும் பரிதாபகரமான காட்சியும் எங்களை ரொம்ப வும் பாதிக்கச் செய்தது. பாராட்டி எழுத மறந்து விடுகிறது!

லால்குடி. எம். இராஜேந்திரன்.

## டெல்லியின் வாடிக்கை!

* தலையங்கம் கண்டேன். தமிழர்களின் தலையில் மிளகாய் அரைப்பதென்பது டெல்லிக்காரர்களுக்கு வாடிக்கையாகிவிட்டது என்பதற்கு மற்றுமோர் உதா ரணம், பிரதமரின் தமிழ்நாட்டு விஜயமும், அள்ளிக் கொடுத்த உதவித் தொகையும்! டெல்லிக்காரர்களுக்கு தமிழ்நாட்டு அரசியல்வாதிகள் என்று காவடி தூக் காமல் இருக்கிறார்களோ, அன்றைக்குத்தான் தமிழர் களுக்கு நல்வாழ்வு கிட்டும் என்பது உறுதி.

மேட்டுப்பாளையம். கலியாண வரன்.

## இங்கிருந்தே ஒரு தரிசனம்!

* ஸ்ரீ சத்ய சாயி பாபாவை நேரில் சென்று தரிசிக்க முடியாத என்னைப் போன்றோருக்கெல்லாம் அவரின் ஆசிகளைக் கொண்டு வந்த உமக்கு என் கண்கள் பனிக்க நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

குடியாத்தம். கே.வி.எஸ். மணியன்.

* வந்தனைக்குரிய ஸ்வாமி சாயி அவர்களின் வண்ணப்படமும், ஆசிரியரின் கட்டுரையும், நிறை வுற்ற தொடர் கட்டுரையும் இந்த வார கல்கி இதழை வணக்கத்துக்குரிய இதழாக்கி மனத்திற்கு நிறைவை ஏற்படுத்தியது.

பெங்களூர்—21. ப. மூர்த்தி.

* சத்திய சாயி பற்றிய கவர் ஸ்டோரி மிகச் சிறப் பாக எழுதப்பட்டுள்ளது. கட்டுரையைப் படித்து முடித் ததும், சுவாமியை நேரில் தரிசித்துப் பெறும் இன்பத்தை அடைந்தேன்!

திருச்சி—18. ராஜிராதா.

* சற்றே கனமான நடையில் கட்டுரையைக் கொண்டு சென்று 'லைட்'டாக முடித்திருக்கிறார்—ரா. கணபதி. ஸ்வீட் செவன்டீன் என்பதற்கேற்ப இனிய னின் லீலைத் தொடரை பதினேழு அத்தியாயங்களில் கச்சிதமாக முடித்த விதத்தைக் கோடிட்டுக் காட்டி யிருந்த விதம் ஸுபர்ப்! மறக்க முடியாத அற்புதத் தொடர். நன்றி கணபதி அவர்களே.

அயன்புரம். த. சத்திய நாராயணன்.

* அன்பர் ரா. கணபதி அவர்களின் 'தீராத விளை யாட்டு சாயி' தொடர் தெவிட்டாத சொற்சுவை அமுதமாகக் கொடுத்து, பகவானின் பிறந்த நாளுக்கு நிறைவு செய்தது மிகமிக அருமை.

பெங்களூர்—8. பத்மநாபன்.

**(பாபா பற்றி ரா. கணபதி எழுதிய நூல்கள் கிடைக்குமிடம்: கலைஞன் பதிப் பகம்; சென்னை—17. — ஆ.ர்.)**

## க(த)ண்டிக்கிறோம்!

* 'தண்டிக்கப்படும் நியாயங்கள்' கதையில் உள் ளது போல் எந்த பாங்கு யூனியனும் இல்லை. கதை யாசிரியர் மிகைப்படுத்தி எழுதியுள்ளதை மிகவும் கண்டிக்கிறேன்.

காஞ்சிபுரம். பொன். தயாளன்.

* சத்யா சீனிவாசனின் சிறுகதைப் படைப்பின் மூலம் இன்று அரசு நிறுவனங்களிலுள்ள அநேக அலுவலகங்களில் நடைபெறும் அன்றாட நிகழ்ச்சி களை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்டி உள்ளீர் கள்!

சென்னை—5. பார்த்தசாரதி.

## எழுதியது நான்தான்

* 17.11.85 கல்கி, கேள்வி—பதில் பகுதியில்,

''சத்துணவு போட்டார்கள்
நிரம்பி விட்டது
வருகைப் பதிவேடு''

என்ற கவிதையைப் பாராட்டியிருந்தீர்கள். நன்றி. அந்தக் கவிதையை எழுதியவன் நான்தான். குடந்தை யிலிருந்து வரும் 'எழுச்சி' மே, ஜூன்—85 இதழில் 'ராஜ ராஜன்' என்ற என் சொந்தப் பெயரிலேயே அது பிரசுரமாகியிருக்கிறது.

கும்பகோணம்—2. சி.என். ராஜ ராஜன்.

## உண்மைக்குப் புறம்பானது!

* மெரினாவை அழகுபடுத்த கடற்கரையிலிருந்த கட்டு மரங்கள், வலைகள் ஆகியவற்றைத் தமிழக அரசு எந்தவித முன்னறிவிப்புமின்றி அப்புறப்படுத்திய சட்ட விரோத நடவடிக்கையைக் கண்டிக்காதவர்கள் யாருமில்லை. ஆனால் காமராஜ் காங்கிரஸ் தலைவர் நெடுமாறன் பெரிய கடல் வள ஆராய்ச்சி நிபுணரைப் போல், அங்கு மட்டுமே இறால் கிடைக்கிறது என்றும், சம்பந்தப்பட்டவர்களுக்கு 'சம்திங்' கொடுத்து, விசைப் படகாளர் செய்த சதி இது என்றும் கூறியது உண் மைக்குப் புறம்பானது.

சென்னை—21. வி. ரமணி பாய்,
உறுப்பினர்,
மத்திய மீன்வளத்துறை.





Vs



# ரோஷமான குஸ்திச் சண்டை!

மார்க்ஸிய கம்யூனிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி 'ஆரிய மாயையா, திராவிட மாயையா? — விடுதலைப் போரும் திராவிட இயக்கமும்' என்ற நூலை எழுதி, கி. வீரமணிக்கு இரண்டு பிரதிகள் அனுப்பி வைத்து, 'தயவு தாட்சண்யம் பார்க்காமல் விமர்சனம் செய்யவும்' என்று கேட்டாலும் கேட்டார். வீரமணி பின்னிவிட்டார் பின்னி! விமர்சன நூல் எத்தனை பக்கங்கள் தெரியுமா? 576!

சாதாரணமாகவே திராவிடர் கழகத்தைப் பற்றி யாராவது பேசிவிட்டாலோ அல்லது எழுதிவிட்டாலோ, வீரமணியும் அவரைச் சார்ந்தவர்களும் அந்தக் 'குற்றம் இழைத்த' வரின் வாதத்துக்குப் பதில் அளிப்பது போதாது என்று, அவர் குலம், கோத்திரம் பற்றியும் விரிவான விமர்சனம் செய்துவிட்டுத்தான் மறு வேலை பார்ப்பார்கள். இப்படி இருக்கிறபோது,

முன்னுக்குப் பின்னான விவரப் பிழைகள்;
வரலாற்றுத் தவறுகள்;
கருத்துப் பிழைகள்

எல்லாம் மலிந்த ஒரு நூலை எழுதி, அதையும் வீரமணிக்கே அனுப்பி, 'நீங்கள் இதை விமர்சனம் செய்து விடுதலையில் வெளியிடுங்கள்' என்று ராமமூர்த்தி கடிதம் எழுதினால் அதன் முடிவு என்னவாக இருக்கும்?

— கி. வீரமணியின் 'உண்மை வரலாறு' புத்தகமாகத்தான் இருக்கும்!

இதில், பாராட்டத்தக்க ஒரு விஷயம்: வீரமணியின் நூல் ஆராய்ச்சித் திறன். ராமமூர்த்தியின் பிழையை, இவர் ஆதாரங்களைத் தேடிப்பிடித்து, அது தவறு என்று நிரூபித்துவிட்டுத்தான், அடுத்த பிழை அல்லது குற்றச்சாட்டுக்குப் பதிலளிக்கப் போகிறார். இதற்காக இவர் குறிப்பெடுத்திருக்கும் நூல்கள், இதழ்களின் எண்ணிக்கை சுமார் 43.

"ஜஸ்டிஸ் கட்சி வெள்ளைக்காரனுக்குத் துதி பாடி வரவேற்றது; அவனே என்றென்றும் ஆள வேண்டும் என்றது" — பி. ராமமூர்த்தி.

"இல்லை. படிப்படியாக ஆட்சியைக் கொடுங்கள். சரியான சமயத்தில் டொமினியன் அந்தஸ்துடன் கூடிய சுயாட்சியை வழங்குங்கள் என்றுதான் ஜஸ்டிஸ் கட்சி கோரியது. வெள்ளைக்காரனுக்கு வெண் சாமரம் வீசியதில் காங்கிரஸ் கட்சி ஒன்றும் சளைத்ததல்ல" — என்கிறார் வீரமணி.

"சுயமரியாதைத் திருமணச் சட்டம், 1952ல் கம்யூனிஸ்ட் கட்சி சட்ட சபையில்



பிரதான எதிர்க்கட்சியாக இருந்தபோது காங்கிரஸ் மந்திரி சபையை வற்புறுத்தி நிறைவேற்றிய சட்டம்'' — ராமமூர்த்தி.

''அல்ல. அண்ணா முதலமைச்சரான பிறகு தி.மு.க. மந்திரிசபை நிறைவேற்றியது'' — வீரமணி.

''தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தை ஊக்குவிப்பதற்காக, வைக்கம் கோயிலில் ஹரிஜனங்களை அழைத்துச் செல்ல ஈ.வெ.ரா. முடிவு செய்தார்'' — ராமமூர்த்தி.

''தவறு. கோயில் நுழைவுக்கு மட்டுமல்ல போராட்டம். கீழ் சாதிக்காரன் தெருவிலேயே நடக்கக் கூடாது என்ற கொடுமையை எதிர்த்துத் துவக்கிய போராட்டமே வைக்கம் சத்யாக்கிரகம்'' — வீரமணி.

''வ. வெ. சு. அய்யரின் சேரன்மாதேவி ஆசிரமத்தில் சமபந்தி போஜனம் பற்றிய சர்ச்சை காரணமாகவே, பெரியார் காங்கிரஸிலிருந்து வெளியேறினார்''—ராமமூர்த்தி.

''தவறு. 1925ல் காஞ்சிபுரத்தில் நடந்த காங்கிரஸ் மாநாட்டுக்கு திரு.வி.க. தலைமை வகித்தார். அந்த மாநாட்டில் பெரியார் வகுப்புரிமைத்தீர்மானத்தை வலியுறுத்தினார். திரு.வி.க. அந்தத் தீர்மானத்தை நிராகரித்ததால் அவர் மாநாட்டிலிருந்து வெளியேறினார். அதுவே காங்கிரஸிலிருந்து பெரியார் வெளியேறக் காரணமாக இருந்தது என்பது தான் உண்மையான வரலாறு'' — வீரமணி.

'என் நினைவிலிருந்தே இந்நூலை எழுதியிருக்கிறேன்' என்று சொல்லும் ராமமூர்த்தி, ஆண்டுகள் விஷயத்தில் வேண்டுமானால் சற்று முன்பின்னாக இருக்கலாம் என்று பார்த்தால் பத்து வருடங்கள், இருபது வருடங்கள் என்று இடைவெளி! வரலாறு விஷயத்தில் கேட்கவே வேண்டாம். விடுவாரா வீரமணி?

'விமர்சனத்தில் தயக்கம், தாட்சண்யம் காட்ட வேண்டாம்'என்று ராமமூர்த்தி கேட்டிருக்காவிட்டாலும்கூட, வீரமணியின் விமர்சன நடை என்னவோ, சாட்டையடியாகத்தான் இருந்திருக்கப் போகிறது. ராமமூர்த்தியின் வேண்டுகோளை 'லிட்டரலா'க எடுத்துக் கொண்ட வீரமணி, உபயோகித்திருக்கும் சொற்றொடர்களுக்குச் சில சாம்பிள்கள்:

— திராவிடர் இயக்கத்தின் மீது சேறு வாரி இறைக்க வேண்டும் என்று, பிறவியில் வந்த துவேஷத்தின் அடிப்படையிலேயே இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார் போலும்.

— திரு ராமமூர்த்தி ஏன் அப்படி எழுத வேண்டும்? பிறப்பினால் உண்டான துவேஷ மனோபாவம் தெள்ளத் தெளிவாகத் தன்னை அடையாளம் காட்டிக் கொள்கிறது.

— திராவிடர் இயக்கத்தை மாசுபடுத்திக் காட்ட வேண்டும் என்பதற்காக மனமறிந்து பொய்களை ஏராளமாக அவிழ்த்துவிட்டிருக்கிறார்.

— தோழர் ராமமூர்த்திக்கு, திராவிடர் இயக்கத்தின் மீது உள்ள துவேஷம் பிறப்பால் ஏற்பட்டது என்பதல்லாமல் வேறு என்ன?

— தோழர் ராமமூர்த்தி சர்வதேசியவாதி தான். எனினும் அவரது ரத்தத்தில் ஊறிய பிறவிக் குணம், அவரை ஜஸ்டிஸ் கட்சி மீது அவரையும் அறியாத அளவுக்கு துவேஷம் கொள்ள வைத்திருக்கிறது.

— தோழர் ராமமூர்த்தி புளுகுகிறார் என்றால், பரம்பரை துவேஷம் அல்லாமல் வேறு என்னவாக இருக்க முடியும்?

— பூணூல் போடாதவர் எனினும், பி. ராமமூர்த்திக்குக்கோபம்பொத்துக்கொண்டு வருகிறது.

இதையெல்லாம் படித்துவிட்டு, ''தனிப்பட்ட பண்பு என்று வரும்போது பெரியார் தொண்டர்கள் யாரும் அந்தப் பண்பிலே இருந்து, நாகரிகத்திலே இருந்து, ஒரு மயிரிழை கூட நகரக் கூடாதவர்கள்'' என்று (பக்கம் 438 ல்) வீரமணி எழுதியிருக்கிறாரே அதையும் படித்துவிட்டு பண்பாடு என்பதற்குப் புது விளக்கம் கூறுகிறாரோ வீரமணி என்று யோசிக்கத்தான் வேண்டியிருக்கிறது.

அதற்கும் அந்தப் பக்கத்திலேயே பதில் கொடுத்திருக்கிறார். ''இந்த ஆய்விலே கூட நான் கொஞ்சமும் தரக்குறைவாகச் சொல்லி விடக்கூடாது என்பதற்காக, கவலை எடுத்துச் செய்கிறேன். என்னையும் மீறி ஏதாவது வந்திருந்தால் அதற்காக நான் வருத்தம் தெரிவித்துக் கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

**விடுதலைப் போரும், திராவிடர் இயக்கமும்: உண்மை வரலாறு — கி. வீரமணி. திராவிடர் கழக வெளியீடு, சென்னை—7. விலை (குறைந்தபட்சம்) ரூ 20/—.**

**—சித்தார்த்**

---



''வீட்டை விட்டு ஓடிப் போன நம்ம பையன், 'இப்போ நல்லா திருந்திட்டேன். வந்து என்னை அழைச்சிக்கிட்டுப் போயிடுங்க'ன்னு லெட்டர் போட்டிருக்கான்.''

''எங்கேயிருந்து...?''

''வேலூர் ஜெயில்லேர்ந்து...''

—ஜா. ரவி.



''பாரதி தேசபக்தரும் சாந்திவனத்தில் நேரு சமாதிக்குச் சென்று ஆசிரியர்களும் எழுத்தாளர்களும் அஞ்சலி செலுத்தினர்.



# ஓராசிரியர் பள்ளிகள்! தொடர்ந்து படிக்காத பிள்ளைகள்!

மத்திய அமைச்சராயிருந்த டாக்டர் சந்திரசேகர் சீனுவுக்கு விஜயம் செய்தபோது, ஒரு பள்ளியைக் காணச் சென்றார். அவர் சென்ற சமயம், பள்ளியில் ஒரு மாணவன் கூட இல்லை! பள்ளிக்கூடமே காலியாக இருந்தது! விசாரித்ததில், ''மாணவர்களெல்லாரும் வயல்களுக்குச் சென்றிருக்கிறார்கள், அறுவடை செய்வதில் விவசாயிகளுக்கு உதவுவதற்காக'' என்ற தகவல் கிடைத்தது.

''என்ன! பள்ளி நேரத்தில் வயல் வேலையா?'' என்று வியப்புடன் கேட்டார் சந்திரசேகர்.

''ஆமாம், நாளை பலத்த புயல் வீசலாமென வானிலை அறிக்கை கூறியதால், முற்றிய கதிர்கள் பாழாவதைத் தடுக்கவே விவசாயிகளுக்கு உதவ மாணவர்கள் சென்றிருக்கிறார்கள்.''

இளம் வயதிலே இத்தகைய சமூகத் தொண்டிலே மாணவர்களை சீனா ஈடுபடுத்துகிறது.

இத்தகவலை நவம்பர் 8,9 தேதிகளில் டில்லியில் நடந்த குழந்தைகள் கல்வி பற்றிய தேசிய மாநாட்டில் (National Conference on Child Education) பேசிய ஷ்யாம் சுந்தர் மஹாபத்ரா என்ற நாடாளுமன்ற உறுப்பினர் வெளியிட்டார்.

அத்துடன் அவர் கூறிய மற்றொரு செய்தி எல்லாரையும் வியப்பில் ஆழ்த்தியது. ரஷ்யாவில் ஸ்டாலினுடைய ஒரே மகன் ஒரு பள்ளியில் படித்து வந்தானும். ஆனால், அவன் ஸ்டாலினின் மகன் என்பது பள்ளித் தலைவரைத் தவிர வேறு எவருக்குமே தெரியாதாம்! அவனுக்கு எவ்விதமான சலுகையும் அளிக்கப்படவில்லை. மற்ற மாணவர்களைப் போலவே நடத்தப்பட்டானும்!

சிரி ஃபோர்ட் அரங்கு (Siri Fort Auditorium) என்ற பிரம்மாண்டமான அரங்கில் நடந்த இம்மாநாட்டில், ''குழந்தைகளால் குரல் எழுப்ப இயலாது. பெற்றோர்களும், ஆசிரியர்களும்தான் குழந்தைகளின் எதிர்காலம் குறித்துக் கவனம் செலுத்திச் செயலாற்ற வேண்டும்'' என்று தமது வரவேற்புரையில் குறிப்பிட்டார் டாக்டர் வைதிக்.

குத்துவிளக்கேற்றி மாநாட்டைத் துவக்கி வைத்த முன்னாள் துணை ஜனாதிபதி ஜாட்டி, ''பள்ளியில் சேரும் குழந்தைகளில் பலர் தொடர்ந்து படிக்காமல் நின்று விடுவதற்குக் காரணம் பொருளாதாரப் பிரச்னை, சமுதாயப் பிரச்னை அல்லது இரண்டும் கலந்த பிரச்னையே. இப்பிரச்னைகளைத் தீர்க்கும் வழி வகைகளைக் கண்டு பிடிப்பதே நம் தலையாய கடமை'' என்றார்.

''நம் தலைவர்கள் நதி நீருக்குப் போடும

சண்டையைப் பார்த்தால் வேடிக்கையாக இருக்கிறது. பெரும்பாலான நதிகள் இமாலயத்தில் உற்பத்தியாகின்றன. அவை இறுதியில் கடலிலே வந்து கலக்கின்றன. கடலிலுள்ள நீர் சூரிய வெப்பத்தில் ஆவியாகச் சென்று மேகமாக மாறி, பிறகு மழையாகப் பெய்து இந்த ஆறுகளில் மீண்டும் நீராக வந்து சேருகிறது. இந்தக் கடல் யாருக்குச் சொந்தம்? சூரியன் யாருக்குச் சொந்தம்? மேகம் யாருக்குச் சொந்தம்?'' என்று கேட்டார், டில்லிப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் டாக்டர் மூனிஸ் ரஸா..

''குழந்தைகளில் முப்பது சதவிகிதத்தினர், பள்ளிப் படிப்பைத் துறந்து, தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களாயிருக்கின்றனர். இந்தக் குழந்தைத் தொழிலாளர்களுக்கு முதலிலே விடுதலை பெற்றுத் தந்து அவர்களைப் பள்ளிகளில் சேர்க்க வேண்டும். அதே சமயத்தில் 'கல்வியின் தரத்திற்கே முக்கியத்துவம் கொடுக்க வேண்டும். பள்ளிக்கு வருபவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்துவதிலேயே கவனம் செலுத்தலாகாது' என்ற உலக வங்கியின் அறிக்கையையும் கவனத்தில் கொள்ள வேண்டும். இன்றுள்ள பள்ளிகளில் 36 சதவிகிதம் ஓராசிரியர் பள்ளிகளாக இருப்பதும், ஒரே ஆசிரியர் நாலைந்து வகுப்புகளை நடத்துவதும், கல்வி வளர்ச்சிக்கு உதவும்படியாக இல்லை'' என எடுத்துரைத்தார் டாக்டர் மாதுரிஷா.

மாநாட்டில் விவாதத்துக்குரிய பல கருத்துக்கள் பலரால் தெரிவிக்கப்பட்டன. ஆனால் இக் கருத்துக்களை ஒட்டியோ, வெட்டியோ, பேசுவதற்குப் பலர் விருப்பம் தெரிவித்துப் பெயர் கொடுத்திருந்தும் நேரமில்லை என்று சிலரே பேச அனுமதிக்கப்பட்டனர். இந்தக் குறையைப் போனால் போகட்டுமென்று ஒதுக்கினாலும் இன்னொரு குறையை அப்படி ஒதுக்க முடியவில்லை. தேசிய மாநாட்டில் ஆங்கிலத்தில் பேச இயலாத சிலர் இந்தியில் பேசியதைப் பொறுத்துக் கொண்டோம். ஆனால் ஆங்கிலத்தில் அழகாகப் பேசக் கூடிய ப்லராம் ஜாக்கர், அமைச்சர் சந்துலால் சந்திரகார் போன்றவர்கள் கூட இந்தியில் பேசி, வந்திருந்த பலரின் பொறுமையைச் சோதித்ததை என்னென்பது!

இந்த மாநாட்டுக்கான முழுப் பொறுப்பையும் ஏற்று, மிகச் சிறப்பாக முன் நின்று நடத்திய நீட்டா பிரகாஷன் என்ற டில்லிப் பதிப்பாளருக்கு இது வெள்ளி விழா ஆண்டு. இதையொட்டி அவர்கள் சார்பில் ஒவ்வொரு மொழியிலும் சிறந்த குழந்தை இலக்கியப் படைப்பாளர் ஒருவருக்கும், சிறந்த ஆசிரியர்கள், கல்வியாளர்களுக்கும் பாராட்டு வழங்கப் பெற்றது.

தமிழில் சிறந்த முறையில் குழந்தை இலக்கிய வளர்ச்சிக்குப் பணிபுரிந்ததற்காக, 'கோகுலம்' கௌரவ ஆசிரியர் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா கௌரவிக்கப் பெற்றார். தமிழக ஆசிரியர்களில் இருவர் கௌரவிக்கப் பெற்றனர். ஒருவர் கோடம்பாக்கம் சரஸ்வதி வித்யாலயா மெட்ரிகுலேஷன் பள்ளி நிர்வாகி, திருமதி சரஸ்வதி. மற்றொருவர் போத்தனூர் ரயில்வே உயர் நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் சைதை சுந்தரமூர்த்தி.

— நமது நிருபர்.

---

## அடுத்த இதழில்...

# விஞ்ஞான உலகமே வியக்கும் விஞ்ஞான சாதனை!

— இந்தச் சாதனையைப் போற்றிட சென்னை வருகிறார் ராஜீவ்.



# செய்யாறு இடைத் தேர்தல்

— நமது நிருபர் நேரில் சென்று சேகரித்த பரபரப்பான தகவல்கள்



# அகிலப் புகழ் பெற்ற அலர்மேல் வள்ளி

— இவ்வாண்டு திருத்திய சூடாமணி விருது பெறும் கலைஞரின் ரசமான பேட்டி; செய்திகள்.

ஸ்தாபிதம் 1942 போன் 2379

'சிறந்த ஆயுர்வேத மருந்துகளுக்கு'

# கும்பகோணம் லலிதா பார்மஸி

(D. L., No - 40)

157, பட்டமங்கலத்தெரு மயிலாடுதுறை PIN. 609001

பிராஞ்ச், 39, ரெங்கனாதன்தெரு தி. நகர்,
சென்னை - 17 போன் No. 441454

105, கச்சேரிரோட், மயிலாப்பூர், சென்னை - 4
போன் No. 73007

'எமது விசேஷ தயாரிப்புகள்'

(1) மதுயஷ்டி தைலம்'' கூந்தல் வளர்ச்சிக்கு உதவ''

(2) நீலிபிருங்காமலக தைலம்'' அகாலநரை, செம்பட்டை, கேச வரட்சியை போக்கி கூந்தலுக்கு கருமையும் குளிர்ச்சியும் தர

(3) யௌவநீ ரஸாயனம்'' ஆண்களுக்கான சிறந்த டானிக்

---

## கொசுக்கள் உங்கள் தூக்கத்தைக் கெடுக்கின்றனவா?



உபயோகியுங்கள் ஓடோமாஸ்-
உறங்குங்கள் நிம்மதியாக

இப்போது 100 கிராம் எக்கானமி பேக்கிலும் கிடைக்கிறது




ஓடோமாஸ்
கொசுக்களின் எதிரி
BALSARA

CHAITRA-B BLS 546 TAM





# படிக்காதவன்

"ஒரு அண்ணன். அவருக்கு இரு தம்பிகள். சந்தர்ப்பவசத்தால் அண்ணனை விட்டு இரு தம்பிகளும் பிரிகிறார்கள். தம்பிகளில் மூத்தவன் டாக்ஸி டிரைவர். அந்த நேர்மையான டாக்ஸி டிரைவருக்கு எத்தனை சத்திய சோதனைகள்? அந்தச் சோதனைகளில் அவர் எப்படித் தேறி வருகிறார் என்பது சாதாரணக் கதையாகத் தோன்றினாலுங்கூட, ரஜினிகாந்தை படிக்காத டாக்ஸி டிரைவராகப் பார்க்கும் போதும், அவரை அவருடைய 'படித்த' தம்பி உதாசீனப்படுத்தும் போதும், அவர் மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டு ஜெயிலில் அடைபடுவதைக் காணும் போதும் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறார்கள் பாருங்கள், அதுவே போதும், படத்தை நிறுத்த.

இடைவேளைக்குப் பின் மூச்சுத் திணற வைக்கும் அளவு சம்பவங்கள். எப்படியப்பா இவ்வளவு பெரிய கதையைச் சொல்லப் போகிறோம் என்று டைரக்டர் நிச்சயம் பெருமூச்சு விட்டிருப்பார்.

ரஜினி தூள் கிளப்பியிருக்கிறார். சண்டைக் காட்சிகளை அமைத்திருக்கும் விதமும் சரி, அதை ரஜினி அவர் ஸ்டைலில் செய்யும் நிறுகும் சரி—அட்டகாசம்.

லட்சுமியிடம் ஒரு குணம். மோசடி ஆசாமிகள் நுழைந்திருக்கிறார்கள் என்று தெரிந்தால் போதும். நகராமல் சண்டித்தனம் பண்ணும். என்னடா, காருக்குப் போய் இப்படி ஒரு காரெக்டரைசேஷன் என்று பார்த்தால், பின்னால் ரஜினி குறுக்கு வழியில் போகப் போகிறேன் என்று தீர்மானித்து தனது 'லட்சுமி'யில் உட்கார்ந்து, ஸ்டார்ட் செய்வதும், அது நகராமல் சண்டித்தனம் பண்ணுவதும், ஆவேசத்துடன் ரஜினிகாந்த் அதை அடித்து நொறுக்குவதும்— அந்த காருக்காக ஒரு சொட்டு அனுதாபக் கண்ணீரை வடிக்க வைத்த முதல் டைரக்டர் இவராகத்தான் இருக்க முடியும். (உபயம்: ஹாலிவுட் திரைப்படம். எங்கோ இருக்கும் வால்ட் டிஸ்னி நிறுவனம் இந்த தர்ஜுமா வேலைகளைக் கண்டு கொள்ளவா போகிறது?)

'கர்ப்பிணி' அம்பிகா, வயிற்றில் சாராய ஸ்டாக் சகிதம் உலாத்திவிட்டு ரஜினியிடம் வாங்கிக் கட்டி, அப்புறம் ரஜினியையே லவ் பண்ண ஆரம்பிக்கிறார். ரஜினியுடன் இரண்டு டூயட். மற்றபடி கதைக்கும் இவருக்கும் சம்பந்தமேயில்லை. வெறும் கிளாமருக்காக சேர்க்கப்பட்டிருக்கிறார் போல.

ரஜினி ஒவ்வொரு பாக்கெட்டிலிருந்தும் பணம் பணமாய் உருவிப் பாச மழையுடன் தம்பியிடம் கொடுக்கும் ஸீன், அன்பே உருவான நாகேஷ் அமரராகும் ஸீன் என்று நிறைய மனத்தைத் தொடும் காட்சிகள்.

சிவாஜி ரஜினியுடன் இணைந்திருந்தாலும், மூத்தவர் வெகு அடக்கி வாசித்திருக்கிறார். எல்லாப் பாடல்களும் இனிமையானவை, ஹிட் ஆகும் என்றாலும்— ஊரைத் தெரிஞ்சுக்கிட்டேன் பாட்டு, படமாக்கப்பட்ட விதம், இசையமைக்கப்பட்ட விதம், அழகான அர்த்தமுள்ள வார்த்தைகள் போடப்பட்ட விதம் ஆகிய எல்லா விதங்களிலும் பார்த்தால் ஓஹோ!

**ராசிபலன்:** ரஜினி என்னும் துருவ நட்சத்திரத்தின் பார்வை பலமாக இருப்பதால் படம் மிகப் பிரகாசமாக விளங்குகிறது. வலுவான கதை இந்த ராசிக்காரருக்கு இருப்பதாலும், இசை அதிபதியின் ஆதிக்கம் மேலோங்கி இருப்பதாலும் எல்லாவகையான நேயர்களையும் திருப்தி செய்யும். இதன் டைரக்டருக்கு எந்தவித தோஷமும் இல்லையாதலால் படம் சுலபமாக ஜெயம் பெறும்!

# கரையைத் தொடாத அலைகள்

எதையுமே நேரந் தவறிச் செய்தால் வாழ்க்கையில் இழக்கக்கூடாததையெல் இழக்க நேரிடும் என்ற தத்துவ விளக்கப் படம்.

இதில் கதாநாயகன், தான் காதலித்த பெண்ணையும் இழக்கிறான்; தன்னைக் காதலித்த பெண்ணையும் இழக்கிறான். நேரந் தவறித் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு செயல்பட்டமைக்காக.

கவுண்டமணி டிஃபன் காரியர் சகிதம் பெண் பார்க்கப் போவது லேசாய்க் கிச்சு





ிச்சு மூட்டுகிறது.

இளவரசி புடவையை வரிந்து கட்டிக் கொண்டு 'டாய்' என்று கத்தி, சண்டை போடுவது லேசாய்ப் புன்முறுவ லைக் கிறது.

அருண்தான் ஹீரோ. இவரை அடுத்த படத்திலும் தொடர்ந்து போட்டால் டைரக்டரின் மூளை நலனைச் சந்தேகிக்க வேண்டி வரும். 'ஒண்ணாங்கிளாஸ்' பையன்கூட இன்னும் கொஞ்சம் நன்றாக நடிப்பான். ஸாரி, வெரி ஸாரி.

மற்றபடி என்ன இருக்கிறது? என்ன சொல்வது?

**ராசிபலன்:** ராகு, கேது ஆகியோர் களின் ஆதிக்கம் மிகப் பலமாக இருப்ப தால், இந்தப் படம் பார்க்கப் போகும் நேயர் களை மூன்று மணி நேரக் கிரகணம் பிடிப் பது நிச்சயம். அப்படியே போனாலும் பரிகார மாக, அவரவர் நட்சத்திர பலத்திற்கு ஏற்ப ஓலைப்பட்டையைக் கண்களையும், காதுகளை யும் சுற்றி இழுத்துக் கட்டிக் கொண்டு தியேட் டரில் நித்திரை யோகத்தில் ஈடுபடுவது நலம்.

## கடமை

ரொம்ப அழுத்தமான ஆரம்பம். போலீஸ் ஆஃபீஸராய் வரும் செந்தாமரை டிபார்ட்மெண்ட்டின் முரட்டுத்தனத்தையும் பிடிவாதத்தையும் கட்டுப்பாடு என்ற பெயரில் வீட்டிலும் பிரயோகிக்கக், குழப்பம் ஆரம்பம். பழமை தோய்ந்த மனைவி அடங்கிப் போக, பிள்ளையும் பெண்ணும் ஆர்ப்பாட்டத் துடன் எதிர்க்கப் பிரியப்பட்டு, போதை ஊசிக்கு அடிமையாகிறார்கள்.

உபயோகமில்லை என்று அவரால் முத் திரை குத்தப்படும் இரண்டு பேரையும் முன்னுக்குக் கொண்டு வந்து காட்டு கிறேன் என்று மிலிட்டரி ரிடையர்டு சத்ய ராஜ் சவால் விடும்போது சுவாரஸ்ய மான முடிச்சு விழுகிறது.

அப்புறம் கடமை, கண்ணீர், சைக்கா லஜி, பாசம், அரசியல், மிரட்டல், ரேப் கள், தற்கொலைகள், கோர்ட் வாதங்கள் என்று அத்தனையும் நெருக்கமாய்த் திணிக் கப்பட்ட காட்சிகள்.

அம்மாவாய் வரும் ஸ்ரீவித்யா, அநாவசிய அல:ட்டல் இல்லாமல் கணவனிடம் கட் டாயப் பணிவையும், குழந்தைகளிடம் கனி வான பாசத்தையும் பொழிகிறார். வார்த்தைகளைவிட கண்களை நம்புகிறார்.

சத்யராஜ் மிலிட்டரி, கம்பீரமான உடம்பு, குஸ்தி போடும் ரிங்கில் இறங்கி எதிரியிடம், 'நீ என்ன ஆறடியா, நான் உன்னை விட உசரம்டா' என்று சொல்லி விட்டு, ஜெயித்தவுடன் அதே டயலாக்கை கொஞ்சம் பாவம் மாற்றிச் சொல்லும் போது அப்ளாஸ் வாங்குகிறார். ஆனால் முன்னுக்குக் கொண்டு வருகிறேன் என்று சொல்லிவிட்டு ரவீந்தரை வெறும் மல் யுத்தத்திற்குப் பழக்கி விடுவது காரெக்ட ரின் அபத்தம்.

ரேவதிக்குத் துடிப்பான வேலை. ஸ்பாட் இண்டர்வியூ என்று 'ஒரு மாதிரியான' பெண்ணை காரில் பேட்டி காண, அந்தப் பெண் மந்திரியின் மடியில் படுத்துக் கொண்டு, "மத்த தொழில்ல அனுபவம் ஏற ஏற சம்பளம் கூடுது. இந்த வேசித் தொழில்ல மட்டும் வயசாக வயசாக ரேட் குறையுது" என்று சொல்வது போன்ற நிறைய மிளகாய் வசனங்கள்.

விறுவிறுவென்று பிரச்னைகளை எடுத்து வீசிவிட்டுச் சிக்கல் பெரிதானதும் டைரக் டருக்கு தோன்றுகிற ஒரே தீர்வு, சம்பந் தப்பட்ட காரெக்டரை தீர்த்துக் கட்டு. இண்டர்வெல்லுக்கப்புறம் பட்டியல் போட்டு சுடப்பட்டோ, கத்தியால் குத்தப் பட்டோ ஆல்மோஸ்ட் (இரண்டு மூன்று பேரைத் தவிர) அத்தனை பேரும் க்ளோஸ்.

ஒரு வன்மையான புதுக்கவிஞனின் முதல் புத்தகத்தின் சிவப்பு வரிகள் போல், 'காட்சிக்கு காட்சி தீவட்டியைத் தூக்கிக் கொண்டு சமுதாயத்தைச் சாடி யிருப்பது கொஞ்சம் ஓவர்டோஸ்.

**ராசிபலன்:** ராசிநாதன் அதிக விரக்தி யுடனும், சமுதாயத்தின் மேல் நம்பிக்கையின் மையுடனும் சுற்றி வருவதால் படத்தின் முதல் பாதி அழுத்தமான கதையுடனும், பிற் பகுதியில் வீண் மனக்கவலைகளையும், சமு தாயத்தின் மீது அவநம்பிக்கையையும் உண்டு பண்ணும். எடுக்கும் முடிவுகளில் ஒரு தைரிய மின்மையால் பரிபூர்ண திருப்தியில்லாமல் உற்சாகம் குன்றும். ஏற்கனவே வாழ்க்கையில் பிடிப்பில்லாதவர்கள் படத்தைத் தவிர்ப்பது நலம். வளரும் புதுக் கவிஞர்களுக்கு நிறைய ஊக்கம் கிடைக்கும்.



# பிரதமர் சொல்லுவது நியாயம் இல்லை

**வாசகர் குமுறல்**

பங்களாதேஷ் வெள்ளத்தினால் ஏற்பட்ட துயரத்தை அம்மக்களுடன் பகிர்ந்துகொள்ள நம் பிரதமர் சென்றதை வரவேற்கும் நாம், இலங்கை மக்களின் துயரங்களையும், உணர்வுகளையும் கண்டறிய இந்தியாவிலிருந்தோ அல்லது ஐ. நா. சபையிலிருந்தோ ஒரு குழுவை அனுப்ப நம் பிரதமர் முயற்சி செய்யவில்லையே என்று ஆதங்கப்படுவது நியாயமே.

சென்னையில் நிருபர்களிடம் இலங்கை அரசின் ஆயுதக் குவிப்பு நிலையை நியாயப் படுத்தும் முறையில் பேசிய பிரதமர் பாகிஸ்தான் ஆயுதக் குவிப்பு முயற்சியை எதிர்த்து உலகளாவிய குரல் எழுப்புதல் எந்த விதத்தில் நியாயமாகும்? புரியவில்லை!

— சொ. சங்கரபாண்டி, சென்னை — 36.

### புண்ணியத் தலமா? புண்பட்ச் செய்யும் தலமா?

செவ்வாய்க்கிழமை காலை 9 மணிக்குச் சென்னையிலிருந்து புறப்படும் 'கங்கா, காவிரி, வாரணாசி எக்ஸ்பிரஸ்', புதன் கிழமை இரவு 10 மணிக்கு வாரணாசி, போய்ச் சேர வேண்டும். பெரும்பாலான நாட்களில் இந்த எக்ஸ்பிரஸ் தாமதமாக ஓடி, புதன் இரவு 2மணி சுமாருக்குத்தான் வாரணாசி (காசி) போய்ச் சேருகிறது.

ஏழை பணக்காரன், படித்தவர் பாமரர் அனைவருமேபுனிதத் தலமாகக்கருதிப்பாவம் நீங்கக் காசியில் கங்கை நீராடச் செல்கின்றனர். நள்ளிரவு நேரங்களில் நடுங்க வைக்கும் கடும்குளிரில், வாரணாசிபோய் ரயிலிலிருந்து இறங்கும் தென் மாநிலப் பயணிகள், குறிப்பாக முதியவர்கள், பெண்கள் காசி ரயில்வே ஸ்டேஷனில் படும் அவதி மிகக் கொடுமை. மொழி புரியாத இவர்களை ஏமாற்றக் காத்திருக்கும் காசி ரயில்வே போர்ட்டர்கள் (சில நல்லவர்கள் இருக்கலாம்) ரிக்ஷா ஓட்டிகள், ரயில்வே பிளாட்பார 'ரோமியோ' க்கள் இத்தனை பேரையும் சமாளித்துப் புனித யாத்திரையை நிம்மதியாகப் பாதுகாப்புடன் முடிக்கும் மக்கள் மிகச் சிலரே. அலகாபாத்—வாரணாசி ஸ்டேஷன்களுக்கிடையே ரயில் பயணிகளின் உடமைகள் திருட்டுப் போவது சர்வசாதாரணம். நேரு பிறந்த மாநிலத்தில் தங்க நகைகளுடன் ஆண்கள் கூடப் பயணம் செய்வதே ஆபத்தாக உள்ளது. எனவே ரயிலில் கூடுதலான போலீசாரை அமர்த்தி பயணிகளுக்குப் பாதுகாப்புத் தரவேண்டும். வாரணாசி எக்ஸ்பிரஸ் காசிக்கு அதிகாலை 5 மணிக்குச் சேரும்படி சென்னையிலிருந்து நண்பகல் புறப்பட வேண்டும்.

வாரணாசி ரயில்வே ஸ்டேஷன் ரிசர்வேஷன் போர்டுகளில் பயணிகளின் பெயர்களை இந்தியில்தான் டைப் செய்து ஒட்டுகிறார்கள். இந்து மதச் சின்னமாக மட்டும் இன்றித்தேசிய ஒருமைப்பாட்டை வளர்க்கும் புண்ணிய தலத்தில் தென்னிந்திய ரயில் பயணிகளை இந்தியை மட்டும் படித்துத் தெரிந்து கொள்ள நிர்பந்திப்பது ஏன்? பட்டதாரிக்கும் பாமரனுக்கும் இந்தி தெரியாவிட்டால், காசியில் வேறுபாடே இல்லை. சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் செய்வது போல் இந்தி பேசும் மாநிலப் பெருநகரங்களில் ரயில், பஸ்களில் ஆங்கிலத்தையும் பயன்படுத்தி தேசிய ஒருமைப்பாட்டைக் காக்க வேண்டும்.

—வி.எச்.கே. ஹரிஹரன், திண்டுக்கல்.

### அரசு அறியுமா?

சமீப வெள்ளத்தால் பல குடிசைகள் பாதிக்கப்பட்டுள்ளன. இந்தக் குடிசை மக்களுக்கு அரசு குடிசைகள் கட்டிக்கொள்வதற்காகப் பணம் கொடுக்க முன்வந்திருக்கிறது. குடிசைப் பகுதிகளுக்கு அரசு ஊழியர்கள் வந்து குடிசைச் சொந்தக்காரர்களின் பெயரைப் பதிவு செய்து கொண்டு போகிறார்கள்.

நான் கண்ட காட்சியோ, பக்கத்தில் உள்ள 'பக்கா' வீட்டில் உள்ளவர்களும் பெயர் எழுதுபவரிடம் 50 — 50 என்று பேசிக் கொண்டு தங்கள் பெயர்களையும் பதிவு செய்து கொண்டார்கள். இதனால் நியாயமாகக் குடிசை மக்களுக்குப் போய்ச் சேருவது என்பது எவ்வளவு தூரம் நிறைவேறும் என்று தெரியவில்லை. இதுபோல் நடைபெறுவது பற்றி அரசு அறியுமா?

— சுகந்தா காளமேகம், சென்னை — 20.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

# காலைப் புதுமை மாலைவரை நீடிக்கச் செய்யுங்கள்!

புதியது







உண்மையான புத்துணர்ச்சி. மற்ற சோப்புகள் தரும் குறைந்த நேர புத்துணர்ச்சி அல்ல. நாள் முழுவதும் உடலின் வியர்வை நாற்றமின்றி திகழும் புத்துணர்ச்சி! புதிய ஸின்த்தால் மட்டுமே அதனைத் தரவல்லது. இப்போது, ஒரு புதிய அற்புத நறுமணம் ஸின்த்தாலில் உள்ளது.

மேலும் அதன் சக்திவாய்ந்த வியர்வை துர்நாற்றம் போக்கும் தன்மை, சரும கிருமிகளை ஒழித்து உங்களை நாள் முழுவதும் நாற்றமின்றி புத்துணர்ச்சியுடன் வைத்திடும்.

**ஸின்த்தால்** மட்டுமே

உங்களை புத்துணர்ச்சியுடன் வியர்வை நாற்றமின்றி நாள் முழுவதும் வைத்திடும்.

Godrej
தயாரிப்பு